
Rexona
Rexona
நாளுக்கு
நாள் அதிக
தெளிவுள்ள, எழி
லோங்கும் சருமத்திற்கு
ரெக்ஸோனா சோப்பை தினமும்
இரண்டு அல்லது மூன்று
தடவைகள் உபயோகித்து உங்கள்
சருமம் அதிக தெளிவோடும் பட்டுப்
போன்ற மென்மையோடும் விளங்கு
வதைக்காணுங்கள்.
ரெக்ஸோனா
கேடில் கலந்த சோப் இது ஒன்றே
RP. 70-172-55 TM



குறி வைத்தால் தவறமாட்டேன்
என்றான் கொள்ளைக்காரன்
வைத்தகுறி தவறாது
என்றாள் கொடுங்கோல் ராணி
அம்புகளை எவினான் கொள்ளைக்காரன்
ஒரு ஆரணங்கை எவினாள் ராணி
ஜூபிடரின்
மர்மயோகி
ADULTS ONLY
சென்னை
பிரபாத்
சித்ரா
ராஜகுமாரி
மற்றும் ராஜதானி பூராவும்....
டைரக்‌ஷன்...
கே. ராம்நாத்
கதை வசனம்..
ஏ.எஸ்.ஏ.சாமி


கவலைப்படும்
தாய்
மார்களுக்கு
ஓர் நற்செய்தி
எப்பொழுதும்
தவறாமல் கிடைக்கின்றது
OSTERMILK
ஆஸ்டர்மில்க்
சிறுகுழந்தைகளின் பால் உணவு
விற்பனை வரி, உள்ளூர் சுங்கவரி நீங்கலாக
நிர்ணயிக்கப்பட்ட சில்லறை விற்பனை விலை:
1 பவுண்டு டின் ரூ. 3-3-0; 2 பவுண்டு டின் ரூ. 6-0-0
கிளாக்ஸோ லேபரேட்டரீஸ் (இந்தியா) லிமிட். பம்பாய். கல்கத்தா. மதராஸ்.
Copyright

# பொருள் அடக்கம்

கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மலர் 10 இதழ் 31 | 1951 மார்ச்சு 4 | விக்ருதி ௵ மாசி ௴ 20௳



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# ஸ்ரீ சாரதா குடீர்

பார்லோகன்ஜ் போஸ்டு

மூஸோரி ஹில்ஸ் (யு.பி.)

அன்பார்ந்த ஐயா,

மூஸோரி மலைச்சாரலில் பார்லோகன்ஜிலே உள்ள இந்த ஆச்ரமம் கல்கத்தா பேலூர் மடத்தின் ஓர் கிளையே. ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சார்ந்த மஹான்கள் பொதுஜன சேவைக்குப் பின் சிரமப் பரிஹாரம் மற்றும் யோகாப்பியாசம் போன்ற தெய்வீக வழிபாடுகளை தனிமையாக அமைதியில் சாதனம் செய்வதற்கு ஏற்றதாக இவ்விடம் அமைந்துள்ளது. ஒரு புறம் ஹிமயமலைச் சிகரங்களும் தெற்கே டூன், ஸஹாரான்பூர் பள்ளத்தாக்குகளும் கொண்ட அழகும் அமைதியும் பொருந்திய இத்தலம் கணக்கிலா பக்தர்களை வருடந்தோறும் காந்தம்போல் தன்னிடம் இழுக்கின்றது. அதிதாரனமாய் பண உதவி செய்துவந்த பஞ்சாப் சிந்து மாகாணத்தின் தனவான்கள் சிலர் நாட்டின் திராப் பிரிவினையால் சின்னாபின்னமாக்கப் பட்டதால் பொதுஜன உதவியாலேயே வளரும் இந்நிலயம் வருமானம் குன்றி முன்போல் சரிவர நடத்தி வர முடியவில்லை. ஆகவே மீண்டும் இந்நிலயத்தை நன்கு நடத்திவர தங்களது உதவியை (பணமாகவோ, அல்லது பதார்த்தமாகவோ) கோருகிறோம்.

இவ் வேண்டுகோளுக் கிசைந்து உதவி செய்து, ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஆசீர்வாதங்களையும், சாதுக்களின் வாழ்த்துக்களையும் அடையப் பிரார்த்திக்கிறோம்.

இப்படிக்கு,
பகவத் தாஸன்
**ஸ்வாமி அநுபவானந்தர்**
தர்மாதிகாரி

எங்கள் அருகாமையில் உள்ள ரயிலடி டேராடூன் (யு.பி.) E. I. RY.

# கல்கி

## மண் குடம் பொன் குடம் ஆயிற்று!

**மா**மியார் உடைத்தால் மண்குடம்; மருமகள் உடைத்தால் பொன்குடம்!

தங்களுக்கு வேண்டியவர்கள் தவறு செய்தால் அது தவறு அல்ல; அதே தவறை வேண்டாதவர்கள் செய்து விட்டால் அது மன்னிக்க முடியாத மாபெரும் குற்றம் ஆகிவிடுகிறது! இத்தகைய 'நீதி' இப்போது சர்வதேச அரசியலை ஆட்கொண்டு அல்லல்படுத்தி வருகிறது.

இந்தோசீனாவில் பிரெஞ்சுத் துருப்புகள் இந்தோ சீன மக்களை எதிர்த்துப் போர்புரிந்து வருகின்றன. அந்தத் துருப்புகளுக்கு அமெரிக்காவும் பிரிட்டனும் ஆயுத வகைகள் கொடுத்து உதவி அளிக்கின்றன. ஆறாயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள அந்த அன்னிய தேசத்தில் பிரெஞ்சுத் துருப்புகளுக்கு என்ன வேலை? — இது ஆக்கிரமிப்புக் குற்றம் அல்லவாம்.

சீனா எல்லைக்கு அருகில் அமெரிக்கத் துருப்புகள் வந்தபின், சீனர்கள் தற்காப்புப் போரில் இறங்கியது ஆக்கிரமிப்புக் குற்றம் ஆகிவிட்டது! உலக சமாதானத்துக்கு உலைவைப்பதாக முடியும் என்று பல நாடுகள் எச்சரித்தும் கூட, சீனா ஆக்கிரமிப்புக் குற்றவாளி என்று சர்வதேச சபையில் பிரகடனம் செய்ய அமெரிக்கா வெகு அவசரப்பட்டது.

ஆனால் அதே சபையினால் நியமிக்கப்பட்ட கமிஷன், பாகிஸ்தான் துருப்புகள் காஷ்மீரில் பிரவேசித்தது சர்வதேசச் சட்டத்துக்கு விரோதம் என்று குற்றம் சாட்டியது. அப்போது அமெரிக்கா, பிரிட்டன் முதலிய வல்லரசுகள் சர்வதேசச் சட்டத்தை மீறிய பாகிஸ்தான்மீது எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள அவசரப்படவில்லை.

பிறகு, அதே ஐ. நா. சபையினால் மத்தியஸ்தராக நியமிக்கப்பட்டவரும் சர்வதேசச் சட்ட நிபுணருமான சர் ஓவன் டிக்ஸனும் பாகிஸ்தான் ஆக்கிரமிப்புக் குற்றம் செய்திருக்கிறது என்று குறிப்பிட்டார். சந்தேகத்துக்கு இடமிராத மேற்படி குற்றச்சாட்டு சம்பந்தமாகவும் வல்லரசுகள் யாதொரு நடவடிக்கையும் கைக்கொள்ள முன்வரவில்லை.

சீனா செய்தது ஆக்கிரமிப்புக் குற்றமாயின், பாகிஸ்தான் அதைக் காட்டிலும் அதிகக் கடுமையான குற்றங்களைச் செய்திருக்கிறது.

ஒருபுறம் அத்தனை குற்றங்களை இழைத்த பாகிஸ்தானையும், மற்றொரு புறம் காஷ்மீரையும் காஷ்மீர் மக்களையும் காப்பாற்றியதற்காகப் போரில் ஈடுபட்ட இந்தியாவையும் சம நிலையில் வைக்க முற்பட்ட மேற்படி வல்லரசுகளின் விபரீதத்தை என்னவென்று சொல்வது?

சென்ற மூன்று வருஷங்களாக ஊசலாடிக் கொண்டிருக்கும் காஷ்மீர் பிரச்னை இன்னும் தீரவில்லை எனில், அதற்குப் பொறுப்பாளி வல்லரசுகளே தவிர இந்தியாவோ காஷ்மீர் சர்க்காரோ அல்ல.

* * * *

**இ**ந்த நிலையில், காஷ்மீர் பிரச்னையைத் தீர்ப்பதற்காக இப்போது ஐ. நா. பாதுகாப்புச் சபையிலே அமெரிக்காவும் பிரிட்டனும் கொண்டுவந்துள்ள தீர்மானம், அந்தச் சபையின் பழைய தீர்மானத்துக்கும் ஐ. நா. கமிஷனின் சிபார்சுகளுக்கும் மத்தியஸ்தரின் யோசனைகளுக்கும் நேர் மாறாக இருக்கிறது.

காஷ்மீர் சர்க்காருக்கு உள்ள உரிமையையும் அதிகாரத்தையும் இது வரையில் ஐ. நா. சபை மறுத்ததில்லை. ஆனால் இப்போது அமெரிக்காவும் பிரிட்டனும் கொண்டு வந்துள்ள தீர்மானம், காஷ்மீர் சர்க்காருக்கு எஜமானர்களாக ஐ. நா. சர்க்காரையும் ஐ. நா. துருப்புகளையும் நியமிப்பதாக இருக்கிறது!

காஷ்மீர் பிரச்னையை நேர்மையாகவும் திருப்திகரமாகவும் தீர்க்க வேண்டுமென்பதில் ஆங்கிலோ—அமெரிக்க வல்லரசுகளுக்கு உண்மையான அக்கறை

இருக்குமாயின், அவை சட்டபூர்வமான தற்போதைய காஷ்மீர் சர்க்காரையோ மக்களையோ அலட்சியம் செய்யக் கூடாது.

காஷ்மீர் மக்கள் விஷயத்தில் ஷேக் அப்துல்லா சர்க்காரைக் காட்டிலும் பாகிஸ்தானுக்கோ அல்லது அமெரிக்கா, பிரிட்டன் முதலிய வல்லரசுகளுக்கோ அதிக அக்கறை இருப்பதற்கில்லை.

காஷ்மீரில் சர்வஜன வாக்கு எடுப்பை அடிப்படையாகக் கொண்டு அரசியல் நிர்ணய சபையை அமைக்கும் முயற்சிகள் நடந்து வருகின்றன. அங்கு சர்வஜன வாக்கு எடுப்பு நியாயமாகவும் ஒழுங்காகவும் நடைபெற வேண்டும் என்று பறைசாற்றிவரும் பாகிஸ்தானும் வல்லரசுகளும், காஷ்மீர் சர்க்காரின் ஒத்துழைப்பு இல்லாமல், மக்களின் ஒத்துழைப்பு இல்லாமல், என்ன செய்ய முடியும் என்பதுதான் தெரியவில்லை!

காஷ்மீர் பிரச்னையைத் தீர்க்கும் விஷயத்தில் பாகிஸ்தான், ஆங்கிலோ—அமெரிக்க வல்லரசுகளைக் காட்டிலும் காஷ்மீர மக்கள்தான் முக்கிய பாத்திரர்கள் என்பதை ஐ. நா. சபையில் அங்கம் வகிக்கும் நாடுகள் உணர்ந்து கொண்டாலன்றி, மூன்று வருஷம் அல்ல முப்பது வருஷம் முயற்சி செய்தாலும் காஷ்மீர் பிரச்னை நேர்மையாகவும் திருப்திகரமாகவும் தீரப் போவதில்லை.

# சபாஷ்! சென்னை சர்க்கார்!

சென்னை சர்க்காரும் நிதி மந்திரியும் நமது மாகாணத்துக்குப் பிரமாதமான பெயர் வாங்கிக் கொடுத்து விட்டார்கள்.

வரி வசூலில் நமது சென்னை சர்க்கார் மற்ற மாகாணங்களை யெல்லாம் முதுகுக்கு மண் காட்டி விட்டார்கள்!

கல்லில் நார் உரிப்பவனையும் வானத்தை வில்லாக வளைப்பவனையும் மணலைக் கயிறாகத் திரிப்பவனையும் சென்னை சர்க்கார் மிஞ்சி விட்டார்கள்!

சென்ற வருஷத்தில் இந்த மாகாணத்தில் அறுபது கோடி ரூபாய் வரி வசூலித்து விட்டார்கள்! வரப்போகும் வருஷத்திலும் அறுபது கோடி ரூபாய் வரி வசூலுக்குத் திட்டம் போட்டிருக்கிறார்கள்!

'திட்டம் போட்டது சரிதான்! ஆனால் காரியத்தில் நடத்த முடியுமா!'' என்று கேட்டால், நமது சர்க்காரால் இதுவும் முடியும்! இதற்கு மேலும் முடியும்!

சென்ற வருஷத்தில் ஐம்பத்தைந்து கோடிக்குத் திட்டம் போட்டு, அறுபது கோடி வசூலிக்க வில்லையா!

இந்த வருஷத்தில் அறுபது கோடிக்குத் திட்டம் போட்டு அறுபத்தைந்து கோடி கூட வசூல் செய்து விடுவார்கள்!

சென்னை சர்க்கார் மிகவும் கெட்டிக்காரர்கள்! மக்களிடம் வரி வசூலிப்பதில் அவர்களை மிஞ்சுவதற்கு யாராலும் முடியாது!

ஆனால், மற்ற நிர்வாகம் எப்படி யென்று கேட்டால், தயவு செய்து காதையும் கண்ணையும் பொத்திக் கொள்ளுங்கள்!

காதைத் திறந்து வைத்துக் கொண்டால், பத்து லட்சம் தரிகாரர் குடும்பங்கள் ''வேலையில்லை! பட்டினி!'' என்று அலறுவது காதில் விழுந்து தொலைக்கும்!

கண்ணைத் திறந்து பார்த்தால், அவர்களுடைய பரிதாப முகங்களும் குழிந்த கண்களும் ஒட்டிய வயிறுகளும் நம்மை வேதனை செய்து இராத்திரியில் தூக்கம் பிடியாமல் செய்யும்!

சென்னை சர்க்கார் வரியைத் தூக்குவதிலும் வசூலிப்பதிலும் காட்டும் முன் யோசனையிலும் சுறு சுறுப்பிலும் திறமையிலும் பத்தில் ஒரு பங்கு கைத் தறிகளுக்கு நூல் சப்ளை விஷயத்தில் காட்டி யிருந்தால், இத்தகைய விபரீதமான நிலைமை ஏற்பட்டிருக்குமா!

நாட்டில் சுபிட்சம் பெருகி, விவசாயமும் கைத் தொழிலும் பெருகி, செல்வம் செழித்தோங்கும் காலத்தில் சர்க்காரின் வரி வருமானம் உயர்ந்தால், அதற்காக நாம் மகிழ்ச்சியடையலாம். சர்க்காரையும் நிதி மந்திரியையும் பாராட்டலாம்.

பஞ்சம் பசி பட்டினியாலும் வேலை யில்லாத் திண்டாட்டத்தாலும் வாடும் மக்களைக் கரும்பைச் சாறு பிழிவது போல் பிழிந்து வரி வசூலைப் பெருக்கிக் காட்டுவதில் பெருமை என்ன இருக்கிறது!

# உண்ணாவிரதம் வேண்டுமா?

சைதாப்பேட்டையிலிருந்து ஒரு விந்தையான செய்தி புறப்பட்டுப் பத்திரிகையிலும் பிரசுரமாகி யிருக்கிறது.

சைதாப்பேட்டை தாலுகா காங்கிரஸ் காரியதரிசி ஸ்ரீ ராதாகிருஷ்ணன் என்பவர் உண்ணாவிரதம் இருக்கப் போகிறாராம்.

ஏன் தெரியுமா!

தமிழ் நாட்டில் காங்கிரஸ் தேர்தல்களில் நடந்த ஊழல்களைப் பற்றி அறுபது புகார்கள் அடங்கிய விண்ணப்பம் ராஷ்டிரபதி டாண்டனுக்கு அனுப்பப்பட்டதாம். ஸ்ரீ டாண்டன் காங்கிரஸ் தலைவரானதும் '' காங்கிரஸ் ஸ்தாபனத்தைத் தூய்மைப் படுத்தப் போகிறேன் '' என்று வாக்குறுதி தந்தாராம். அந்த வாக்கை அவர் நிறைவேற்றவில்லையாம். தமிழ் நாட்டிற்கு வந்து ஊழல்களை நிவர்த்திக்க ஏற்பாடு செய்யவில்லையாம்.

மகான்கள் வளர்த்த காங்கிரஸ் ஸ்தாபனம் இப்படித் தூய்மை குன்றி யிருப்பதையும்,

பரஸ்பர உதவி



டாண்டன் அதைக் கவனியாதிருப்பதையும் முன்னிட்டு திரு ராதாகிருஷ்ணன் உண்ணு விரதம் இருக்கப் போகிறாராம்.

நாம் உண்ணுவிரதத்தை ஆதரிக்க வில்லை; அதிலும் இந்தமாதிரி காரியங்களுக்கு உண்ணு விரதத்தை ஆதரிக்கவில்லை; அந்த யோசனையைக் கைவிடும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.

ஆனால் ராஷ்டிரபதி டாண்டன் மேற்படி ஊழல்களைப் பற்றி விசாரித்து முடிவு சொல்வது நன்மை பயக்கும் என்று கருதுகிறோம்.

மேற்படி ஊழல்கள் ஒன்றும் நடைபெற வில்லை என்று ஏற்பட்டால் நல்லதாய்ப் போயிற்று. சென்னை மந்திரிகளைப் பற்றிய புகார்களை மூன்று தலைவர்கள் விசாரித்து முடிவு சொல்லவில்லையா!

விசாரணையில் ஊழல்கள் நடந்திருப்பதாக ஏற்படுமானால், அவற்றை நிவர்த்திக்கத் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்வது அவசியம்.

அல்லது பழைய குப்பைகளைக் கிளற வேண்டாமென்று கருதினால் இங்கு வந்து தமிழ் நாட்டுக் காங்கிரஸ் வாதிகளுக்குள் பூரண ஒற்றுமை ஏற்படுத்தவாவது முயல வேண்டும்.

இதற்குப் பூர்வாங்கமாக இதுவரை காங்கிரஸ் கமிட்டித் தேர்தல் நடத்தாமல் வைத்திருக்கும் இடங்களில் தேர்தல் நடத்த வேண்டும். தாலூகா கமிட்டிகளும் ஜில்லா கமிட்டிகளும் உருவாகி வேலை செய்ய உதவ வேண்டும்.

ஆந்திர மாகாணக் கமிட்டிக்குத் தலைவர் தேர்தலும் நிர்வாகக் கமிட்டித் தேர்தலும் நடத்த பம்பாய் ஸ்ரீ எஸ். கே. பட்டீல் வருகிறாராம். அம்மாதிரி தமிழ் நாட்டிலும் தேர்தல் தடைப்பட்ட இடங்களில் தேர்தலை நடத்த ஒருவரை ஏன் அனுப்பக் கூடாது! மாகாணத்தின் தலைநகரான சென்னை நகரில் ஜில்லாக் கமிட்டி ஏற்படவில்லை என்பதைக் காட்டிலும் கேவலம் வேறு உண்டா!

# கைவிடப்படார்!

தமிழ் நாட்டுத் தேர்தல் புகார்களைப் பற்றி விசாரிக்க ஒரு மாகாண டிரிபுனலை நியமிப்பதில் தமிழ் மாகாண காங்கிரஸ் தவறிவிட்டது.

நியாயம் செய்யும் விஷயத்தில் மாஜி நீதிபதி ஸ்ரீ வி. பாஷ்யம் ஐயங்கார் கண்டிப்பாக இருக்கிறார் என்பதற்காக அவரை மாற்ற ஒரு முயற்சி நடந்தது. அதன் பயனாகவே மாகாண டிரிபுனல் ஏற்படுவது தடைப்பட்டது.

அகில இந்தியக் காரியக் கமிட்டியார் இப்போது மாகாண டிரிபுனல் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அதில் ஸ்ரீ வி. பாஷ்யம் ஐயங்கார் இருப்பது, பற்றித் திருப்தி அடைகிறோம். நியாயம் வேண்டும் என்போரின் வெற்றி என்றே இதைச் சொல்ல வேண்டும்.

கடவுளை நம்பினோர் கைவிடப் படார் என்பதைப் போல் காரியக் கமிட்டியை நம்பினோர் கைவிடப் படார் என்று இதிலிருந்து காங்கிரஸ் ஊழியர்கள் உறுதி கொள்ளலாம்.

கடவுளின் நீதி கிடைப்பதற்குச் சில சமயம் தாமதம் ஆவதுபோல், காரியக் கமிட்டி நீதி வழங்குவதற்கும் சில சமயம் தாமதம் ஆகிறது. ஆனால் பொறுமையுடன் காத்திருந்தால் முடிவில் நீதி கிட்டும் என்று நம்பி யிருக்கலாம்.

## கைதேர்ந்த பால்காரர்!



# வெள்ளியும் மறைந்தது!

இப்போதுள்ள சென்னைச் சட்டசபையைக் குறித்து நாம் ஒன்றும் குறை கூறக்கூடாது. ஏனெனில், இந்தச் சட்டசபை ஜனநாயக முறையில் அமைந்த சட்டசபை. சுதந்திர அரசாங்கத்தை அமைத்து நடத்தும் சட்டசபை. பொது மக்களாகிய நாம் வோட்டுக் கொடுத்து அனுப்பிய அங்கத்தினர் இச் சபையை அலங்கரிக்கிறார்கள். எல்லாவற்றுக்கும் மேலாகக் கனம் சிவசண்முகம் பிள்ளை அவர்கள் இச் சட்டசபையின் தலைமைப் பீடத்தில் வீற்றிருக்கிறார்கள். இந்தச் சட்டசபையின் மதிப்பைக் காப்பதில் அவர்கள் கண்ணும் கருத்துமா யிருக்கிறார்கள். ஆகையால் இப்போதுள்ள சென்னைச் சட்டசபையைக் குறித்து நாம் ஏதும் குறைவாகச் சொல்லக்கூடாது.

ஆனாலும் சில சமயம் நமக்குப் பழைய பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ்—இரட்டை ஆட்சியின் கீழ் — நடந்த சென்னைச் சட்டசபை ஞாபகத்துக்கு வந்து விடுகிறது. அந்தச் சட்டசபையை 'மட்டசபை' என்று பல முறை நாம் சொன்னதுண்டு. 'பொம்மைகள் கொலு வீற்றிருக்கும் சபை' என்று சொன்னதுண்டு. 'அதிகார வர்க்கத்தார் சூத்திரக் கயிறு கொண்டு ஆட்டி வைக்கும் சபை' என்று படம் போட்டதும் உண்டு. அந்த பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் சட்டசபைகளைப் பற்றி அவ்வளவெல்லாம் அப்போது குறை சொன்ன போதிலும், "அடாடா! அந்த நாளையச் சட்டசபை எவ்வளவு சுவாரஸ்யமாயிருந்தது! இனி மேல் அப்படிப்பட்ட சட்டசபையும் ஏற்படப் போகிறதா!" என்று சில சமயம் எண்ணிப் பெருமூச்சு விடுகிறோம். ஸ்ரீ சத்தியமூர்த்தியும் அறிஞர் ஸி. ஆர். ரெட்டியும் சென்னைச் சட்டசபையில் அங்கம் வகித்து விவாதங்களில் ஈடுபட்ட நாட்களை எண்ணித்தான் அவ்விதம் ஏங்குகிறோம்.

சென்ற வாரத்தில் அந்தி மாலை நேரத்தில் மேற்கு வானில் வியாழனும் வெள்ளியும் சேர்ந்தாற்போல் சில தினங்கள் சுடர்விட்டுப் பிரகாசித்தன. அந்த இரு கிரஹங்களின் சேர்க்கை அற்புதக் காட்சியா யிருந்தது.

சென்னைச் சட்டசபையில் ஸ்ரீ சத்தியமூர்த்தியும் ஸ்ரீ ஸி. ஆர். ரெட்டியும் வியாழன்-வெள்ளி கிரகங்களைப்போல் ஒளிவீசி விளங்கினார்கள். அவர்கள் என்ன கேள்வி கேட்கப் போகிறார்கள், என்ன குறுக்குக் கேள்வி கேட்டு அதிகார வர்க்கத்தை மடக்கப் போகிறார்கள், எதைப்பற்றி எப்போது பேசப்போகிறார்கள், பேசி அதிகார வர்க்க ஊழலைப்பற்றி விளாசப் போகிறார்கள், அவர்களுடைய பேச்சுக்களில் சொல்லம்புகள் எப்படிச் சுடர்விடப் போகின்றன, ஹாஸ்யமும் எள்ளலும் எப்படிக் குதித்து விளையாடப் போகின்றன, — என்றெல்லாம் படித்தவர்கள்—பாமரர்கள் எல்லாரும் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள்.

அத்தகைய பிரகாசமான கிரகங்களில் வியாழன் முன்னமே அஸ்தமித்து விட்டது. சென்ற வாரத்தில் வெள்ளியும் மறைந்து விட்டது. வானம் சூனியமாகத் தோன்றுகிறது.

ஸ்ரீ ஸி. ஆர். ரெட்டி அவர்கள் ஆந்திர தேசத்துப் பண்பாட்டின் சிகரமாக விளங்கியவர். சித்தூர் ஜில்லாக்காரரான படியால் தமிழ்ப் பண்பாட்டின் நல்ல அம்சங்களும் அவரிடம் சேர்ந்து விளங்கின. ஸ்ரீ ஸி. ஆர். ரெட்டி அரசியல் வாழ்க்கையில் ஏதோ தப்பித் தவறி வந்து சேர்ந்தவர்தான். அவருடைய வாழ்க்கை முக்கியமாகக் கல்வித் துறைக்கே அர்ப்பணமானது. மைசூர் கல்வி இலாகாவில் இன்ஸ்பெக்டராக உத்தியோக வாழ்க்கை தொடங்கினார். உயர்தரக் கல்விக்கு அரும்பெரும் தொண்டுகள் செய்தார். ஆந்திர சர்வகலாசாலையில் உப அத்தியட்சகராக இருந்து அவர் செய்த தொண்டு அழியாப் புகழ் வாய்ந்தது. இறுதியில் தாம் உத்தியோக வாழ்க்கை தொடங்கிய மைசூர் இராஜ்யத்திலேயே கல்வித் துறையில் மிக உயர்ந்த பதவி வகித்திருந்தார். கடைசி மூச்சு உள்ள வரையில் கல்விக்குத் தொண்டு புரிந்து இன்னுயிரை நீத்தார். அத்தகைய அறிஞர்—கல்விமான்,—கலைத்தொண்டர்—தேசபக்தர்—ரஸிகர் ஆகிய ஸ்ரீ ஸி. ஆர். ரெட்டியின் ஆன்மா கலைமகளின் பாத தாமரைகளை நிச்சயம் அடைந்திருக்கும்.

# மாப்பிள்ளைகளே! உஷார்!

சுதந்திர இந்தியாவில் மாப்பிள்ளைகள் தங்கள் உரிமைகளையும் நலன்களையும் பாதுகாத்துக் கொள்வதற்காக ஒரு சங்கமோ, வேறு ஸ்தாபனமோ அமைத்துக்கொள்ள வேண்டியது அவசியமாகி விட்டது. நாட்டின் நிலைமை அவ்வளவு மோசமாகிவிட்டது!

சாதாரணமாக, மாப்பிள்ளை என்றாலே ஒரு ஜோர் உண்டு; ஒரு சலுகை உண்டு. பெரிய மனிதர்களின் மாப்பிள்ளைகள் என்றால், சொல்ல வேண்டியதில்லை. மந்திரிகளின் மாப்பிள்ளைகள் என்றாலோ, கேட்கவே வேண்டியதில்லை.

இப்படி விருந்துவந்த காலம் மலை ஏறிப் போய்விட்டதாகக் காண்கிறது. பம்பாயில் சமீபத்தில் நடந்திருக்கும் ஒரு சம்பவம் நமக்கு இந்தப் பயத்தை உண்டு பண்ணுகிறது.

பம்பாய் சர்க்கார் தண்ணீர் வசதியும் ஆற்றுப் பாசன வசதியும் இல்லாத குஜராத் பிரதேசத்தில், பூமியில் ஆழப் போய்த் தண்ணீர் கொண்டு வரும் குழாய்க்கிணறுகளை எடுக்கத் தீர்மானித்தார்கள். இது பேஷான யோசனை.

இதற்காக இரண்டு கோடி ரூபாய் செலவு செய்யத் திட்டமும் போட்டார்கள். இதைப் பற்றியும் ஆட்சேபம் ஒன்றுமில்லை.

அமெரிக்கக் கம்பெனி ஒன்று, இந்தியக் கம்பெனி ஒன்று, — இரண்டு கம்பெனிகள் தான் பம்பாய் மாகாணத்தில் குழாய்க் கிணறு எடுக்கும் வேலை செய்கின்றன. இந்த இரண்டில் இந்தியக் கம்பெனிக்குக் கண்டிராக்டு கொடுக்க முடிவு செய்தார்கள். இதுவும் சரியான முடிவு என்றுதான் தோன்றும்.

ஆனால், இந்தக் கட்டத்திலேதான் மாப்பிள்ளை விஷயம் வந்து குறுக்கிட்டது.

மேற்படி இந்தியக் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர், இந்திய சர்க்கார் உணவு மந்திரியான கனம் முன்ஷி அவர்களின் மாப்பிள்ளை என்று தெரிய வந்தது.

இதைக் கண்டுபிடித்த பம்பாய்ச் சட்டசபை அங்கத்தினர் ஒருவர் சட்டசபையில் இந்தப் பிரச்னையைக் கிளப்பினார்.

"மந்திரியின் மாப்பிள்ளையைத் தலைவராகக் கொண்ட கம்பெனிக்குக் கண்டிராக்ட் கொடுக்கலாமா!" என்று கேட்டார்.

பம்பாய் உள்நாட்டு மந்திரி கனம் மொரார்ஜி தேசாய் மிகவும் கண்டிப்புக்காரர் என்று பெயர் பெற்றவர். பேச்சுக்களும் பதில்களும் வெட்டு ஒன்றும் துண்டு இரண்டுமாக இருக்கும். தயவு தாட்சண்யம் பாராதவர். நியாயம் என்றால் நியாயந்தான்; கண்டிப்பு என்றால் கண்டிப்புத்தான். மாப்பிள்ளையானாலும் சரி, மாமனாரா யிருந்தாலும், இரண்டும் இல்லாதவரானாலும் சரி, — அதற்கும் நியாய முறைக்கும் என்ன சம்பந்தம் என்று கேட்கக் கூடியவர்.

அப்படித்தான் அவர் பதில் சொன்னார். "முன்ஷியின் மாப்பிள்ளையா யிருந்தால் என்ன! அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்!" என்று கேட்டார்.

ஆனால் அதிசயம்! அதிசயம்! இருபத்து நாலு மணி நேரத்துக்குள் கனம் மொரார்ஜி தேஸாய் தமது கண்டிப்பான பிடிவாதத்தை மாற்றிக்கொண்டு விட்டார்.

மேற்படி இந்தியக் கம்பெனிக்குக் கண்டிராக்ட் கொடுக்கும் யோசனையைக் கைவிட்டு விட்டதாகச் சொன்னார். மறுபடியும் 'டெண்டர்' கேட்கப் போவதாகவும் தெரிவித்தார்! இப்படித் தமது பிடிவாதத்தை மாற்றிக் கொண்டதற்குக் கனம் மொரார்ஜி தேஸாய் சொன்ன காரணம் மிக மிக முக்கியமானது.

"ஜனநாயக ஆட்சி முறையின் கீழ் ஆட்சி பீடத்தில் இருப்பவர்கள் தாங்கள் செய்வது சரி என்று நம்பிச் செய்தால்மட்டும் போதாது. அது சரியான காரியந்தான் என்பதைப் பொது மக்கள் ஒப்புக்கொள்கிறார்களா என்று பார்க்க வேண்டும். அப்படிப் பொது மக்கள் ஒப்புக் கொள்ளக்கூடிய முறையிலேயே சரியான காரியங்களையும் செய்ய வேண்டும். அதனால்தான், எங்கள் பழைய முடிவு சரியானது என்று நாங்கள் கருதினாலும், மறுபடியும் டெண்டர் கேட்கத் தீர்மானித்தோம்" என்றார்.

சரியான பேச்சு. நூற்றில் ஒரு வார்த்தை.

இதை நமது சென்னை மாகாணத்து மந்திரிகளுக்கும் சிபார்சு செய்கிறோம்.

மாப்பிள்ளைகளுக்குச் சொன்னது மாமனார்களுக்கும் பொருந்தும் என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

நம் சென்னைச் சட்டசபையில் சில மாதங்களுக்கு முன்பு மாமனார்கள் விஷயமும் மாமன்மார்கள் விஷயமும் மற்றும் பல உறவினர்கள் விஷயமும் அடிபட்டன.

மந்திரிகளின் உறவினர்களை டைரக்டர்களாகக் கொண்ட கம்பெனிகளுக்குக் கடன் கொடுக்கலாமா என்ற பிரச்னை எழுந்தது.

"ஒருவர் என் மாமனாராகவோ மாமனாகவோ இருப்பதற்காக அவரைத் தண்டிக்க முடியுமா!" என்று சென்னை மந்திரி ஒருவர் வெளுத்து வாங்கி விட்டார்.

ஜனநாயக ஆட்சியில் மந்திரிகள் சரியானதையும் முறையானதையும் நியாயமானதையும் செய்தால் மட்டும் போதாது.

அது சரியானது, முறையானது, நியாயமானது என்பதைப் பொது மக்கள் ஒப்புக் கொள்ளும் விதத்திலும் செய்ய வேண்டும்.

---

அட்டைப்பட விளக்கம்

அல்லியங் கமலங்கண் டான்
அண்ணல்தன் வடிவுகண் டான் — கம்பர்.

தாமரை மலரைப் பார்த்தாள். இல்லை, ராமபிரானின் அழகிய முகத்தைப் பார்த்தாள்.

தாமரையின் செவ்விதழ்களைப் பார்த்தாள். இல்லை, அவற்றிற்கு ஒப்பான சக்கரவர்த்தித் திருமகனின் அழகிய நயனங்களைக் கண்டாள்.

மறுபடியும் இமைத்துப் பார்த்தாள். இல்லை, தன் காதலனின் கரங்களைக் கண்டாள்.

இன்னும் ஒரு முறை கண்ணை மூடித் திறந்து பார்த்தாள்; காட்டில் நடந்து வந்த கணவனின் பாதங்களைக் கண்டாள்.

கோதாவரிக் கரையில், பஞ்சவடியிலிருந்த சீதை இவ்விதம் தாமரை மலரை அனுபவித்தாள். இல்லை, இல்லை—ராமபிரானின் வடிவழகை அனுபவித்தாள்.

உண்மை ஒன்றை விளக்க ஓர் உபமானம் கூறுவது மரபு. ஆனால் சிலர் அந்த உண்மையை விட்டு விட்டு, 'ஆகா! என்ன அழகான உவமை!' என்று உபமானத்திலேயே நின்று விடுவார்கள். சீதை அவ்வாறு நின்றுவிடாமல், உண்மையையே அனுபவித்தாள். "அண்ணல்தன் வடிவு கண்டாள்" என்று அழுத்தந் திருத்தமாகக் கவிஞர் பெருமான் கூறுகிறார்.

ஆனால் ராமனின் வடிவழகையோ, தாமரைக்கு இயற்கையாயுள்ள அழகையோ பார்க்கத் தெரியாத பசுங்கன்று தாமரையைத் தின்னக்கூடிய பூண்டு என்று கருதி மூசுர வருகிறது!

இந்தப் பரந்த உலகில் எல்லோரும் சங்கீதக் கலையை அனுபவிக்கக் கூடியவர்களா யிருப்பது இயலாத காரியம்! அப்படியே எல்லோரும் சித்திரக் கலையின் உயர்வை அனுபவிக்கக் கூடியவர்களாக இருக்க மாட்டார்கள். ஆனால் ஒரு சிலர், "சங்கீதம் சோறு போடுமா! சித்திரத்தினால் வயிறு நிரம்புமா!" என்று கேட்டு விடுகிறார்கள். இந்தக் கோஷ்டியினரைத்தான் பசுங்கன்று தாமரையைத் தின்ன வருவதாகச் சுட்டிக் காட்டுகிறார் நம் சித்திரக்காரர்.

அறுசுவை உண்டியையும் அரச போகத்தையும் துறந்து, கல்லும் புல்லும் கலந்து விரித்த கட்டாந்தரையைப் பஞ்சணையாகக் கொண்டு வாழ்கிறாள் சீதை! அவள் பக்கத்தில் 'உணவே உண்மை' என்று கொள்ளும் ஒரு பசுங் கன்று!

உலகில் இருளும் ஒளியும் மலையும் மடுவும் இருப்பது இயல்புதானே!

# பொன்னியின் செல்வன்

## பூர்வ கதை

இன்றைக்கு 1070 ஆண்டுகளுக்கு முன்னால் சோழ மகா சாம்ராஜ்யத்துக்கு விஜயாலயன் அடிகோலினான். அதற்கு நூறு ஆண்டுகளுக்குப் பிறகு இரண்டாவது பராந்தக சோழரின் ஆட்சிக் காலத்தில் சோழப் பேரரசு தென்னாட்டில் இணையற்ற வலிமையுடன் விளங்கிற்று. இரண்டாவது பராந்தகருக்குச் சுந்தர சோழர் என்ற காரணப் பெயரும் உண்டு. சுமார் பத்து ஆண்டுகள் புகழுடன் அரசு புரிந்து சோழப் பேரரசை நாலாபுறமும் விஸ்தரித்த பிறகு சுந்தர சோழர் பாரிச நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையானார். அவருடைய மூத்த புதல்வன் ஆதித்த கரிகாலன் காஞ்சியில் அவருடைய பிரதிநிதியாகவும் வடதிசைப் படையின் மாதண்ட நாயகன் அதாவது பிரதம சேனாதிபதியாகவும் இருந்தான். கடைசிப் புதல்வன் அருள்மொழிவர்மன் (பிற்காலத்தில் ராஜராஜன் என்று புகழ் பெற்றவன்) இலங்கைத் தீவில் போர் புரிந்து கொண்டிருந்தான். இருவருக்கும் நடுவில் பிறந்த சரித்திரப் பிரசித்தி பெற்ற குந்தவைதேவி மற்ற அந்தப்புர மாதருடன் குடந்தைக்கு அருகில் இருந்த பழையாறை நகரில் இருந்தாள்.

விஜயாலய சோழன் காலத்திலிருந்து சோழர்களுக்கு உறுதுணைவர்களாக இருந்து வந்தவர்கள் பழுவூர்ச் சிற்றரசர்களாகிய பழுவேட்டரையர் வம்சத்தினர். அச்சமயம் அண்ணன் - தம்பிகளாகிய இரு பழுவேட்டரையர்கள் மிக்க செல்வாக்குப் பெற்றிருந்தார்கள். பெரிய பழுவேட்டரையர் தனாதிகாரி, தானிய பண்டார நாயகர், இறை விதிக்கும் தேவர் ஆகிய மிக முக்கிய பதவிகளை வகித்து வந்தார். சின்னப் பழுவேட்டரையராகிய காலாந்தக கண்டர் தஞ்சைக் கோட்டையின் தளபதியாக இருந்து சுந்தர சோழரின் பாதுகாப்புக்குப் பொறுப்பு வகித்தார்.

பெரிய பழுவேட்டரையர் அறுபது வயதுக்கு மேல் நந்தினி என்னும் பூர்வோத்தரம் அறியாத அழகியை மணந்தார். அது முதல் அவருடைய மனம் மாறத் தொடங்கியது. சுந்தர சோழருக்குப் பிறகு அவருடைய புதல்வர்கள் இருவரும் பட்டத்துக்கு வரக்கூடாது என்றும், சுந்தர சோழரின் பெரிய தந்தை புதல்வனாகிய மதுராந்தகனே பட்டத்துக்கு வரவேண்டும் என்றும் தீர்மானித்தார். இதற்குச் சோழ சாம்ராஜ்யத்துப் பெரிய தனபதிகள், பிரமுகர்கள், சிற்றரசர்கள் முதலியோரின் ஆதரவைத்தேடி, பெரும்பாலும் வெற்றி பெற்றார்.

இத்தகைய சந்தர்ப்பத்தில் பழைய வாணர் குலத்தைச் சேர்ந்த வல்லவரையன் வந்தியத்தேவன் என்னும் நம் கதாநாயகன் காஞ்சியிலிருந்து தஞ்சைபுரிக்குப் பிரயாணமானான். ஆதித்த கரிகாலனிடமிருந்து அவனுடைய தந்தைக்கும் தங்கைக்கும் ஓலைகள் கொண்டு போனான். வழியில் வீரநாராயண ஏரிக்கரையில் சம்புவரையர் மாளிகையில் ஒருநாள்

கல்கி

இரவு தங்கினான். சம்புவரையர் புதல்வன் கந்தமாறன் வந்தியத்தேவனுடைய நண்பன். சம்புவரையரின் கோட்டை மாளிகையில் பழுவேட்டரையரும் மற்றும் பல பிரமுகர்களும் சுந்தர சோழரின் புதல்வர்களுக்கு எதிராகச் செய்த சதியைப் பற்றி அறிந்து கொண்டான்.

அங்கே அவனுக்கு அறிமுகமான ஆழ்வார்க்கடியான் என்னும் வீர வைஷ்ணவனும் மேற்படி சதியாலோசனையைப் பற்றித் தெரிந்து கொண்டான். அதுமட்டுமன்றி, திருப்புறம்பயம் பள்ளிப் படைக்கருகில் நள்ளிரவில் நடந்த கொலைகாரச் சதியைப் பற்றியும் ஆழ்வார்க்கடியான் தற்செயலாகத் தெரிந்துகொள்ள நேர்ந்தது.

வந்தியத்தேவன் குடந்தை ஜோசியர் வீட்டிலும் அரசலாற்றங் கரையிலும் குந்தவை தேவியைச் சந்தித்தான். ஆனால் அவளை இன்னாரென்று அவன் தெரிந்து கொள்ளவில்லை.

தஞ்சைக் கோட்டைக் கருகில் மூடு பல்லக்கில் சென்ற நந்தினி தேவியைப் பார்த்து அவளிடம் பழுவூர் முத்திரை மோதிரத்தைப் பெறுகிறான். அதன் உதவியினால் தஞ்சைக் கோட்டைக்குள் பிரவேசித்துச் சுந்தர சோழரிடம் ஓலையையும் கொடுத்தான். மேலும், அவருக்கு நேர இருந்த அபாயத்தைப் பற்றி எச்சரிக்க ஆரம்பிக்கையில் சின்னப் பழுவேட்டரையர் வந்து விட்டார். அவன்பேரில் ஐயங்கொண்டு கண்காணிப்பில் வைத்தார். கண்காணிப்புச் செய்தவர்களை ஏமாற்றிவிட்டு வந்தியத்தேவன் பெரிய பழுவேட்டரையரின் தோட்ட மாளிகையில் லதா மண்டபத்தில் நந்தினி தேவியைக் கண்டான். நந்தினி அவனைத் தனது மோக வலையில் சிக்கவைக்க முயன்றதுடன், குந்தவைப் பிராட்டி மறு ஓலை கொடுத்தால், அதைத் தன்னிடம் கொண்டு வந்து காட்ட வேண்டுமென்றும் கோரினான்.

அதே சமயத்தில் திருப்புறம்பயம் பள்ளிப் படைச் சதியில் ஈடுபட்ட ரவிதாஸன் என்பவனும் நந்தினியைப் பார்க்க வந்தான். அவளிடம் இலங்கையில் செலாவணியாகக் கூடிய பொற்காசுகளைப் பெற்றுக் கொண்டான்.

ரவிதாஸனைக் கொண்டு வந்தியத்தேவனைக் கண்காணிப்பில் வைத்திருக்க நந்தினி விரும்பினான். ஆனால் அதற்குள் அவன் மறைந்து விட்டான்.

இரவு ஒரு ஜாமத்துக்குப் பெரிய பழுவேட்டரையர் தஞ்சைக்குத் திரும்பி வந்தார். கோட்டைத் தளபதியாகிய சின்னப் பழுவேட்டரையரைப் பார்த்து அன்று நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றித் தெரிந்துகொண்டு தமது மாளிகைக்குத் திரும்பினார். சின்னப் பழுவேட்டரையரின் வார்த்தைகள் அவருக்குத் தம் இளம் மனைவி நந்தினியின்பேரில் ஐயங்களை எழுப்பியிருந்தன.

ஆனால் நந்தினியைப் பார்த்துப் பேசியபோது அந்த ஐயங்கள் எல்லாம் பறந்துவிட்டன. நந்தினி காலால் இட்ட பணியைத் தலையால் நிறைவேற்றும் மனோநிலையை அடைந்தார். சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி பதவிக்குப் பெரிய பழுவேட்டரையரே உரியவர் என்ற எண்ணத்தை அவருடைய மனதில் நந்தினி எழுப்பி விட்டான்.

முக்கிய சரித்திர பாத்திரங்களையும் தமிழ்நாட்டுச் சரித்திர நிகழ்ச்சிகளையும் அடிப்படையாகக் கொண்ட இப்பெருங் கதையை வாசகர்கள் இந்த இடத்திலும் படிக்கத் தொடங்கலாம்.

## அத்தியாயம் 40

# இருள் மாளிகை

காணாமற்போன வந்தியத்தேவன் என்ன ஆனான் என்பதை இப்போது நாம் கவனிக்கலாம். இருளடைந்த மாளிகைக்கு அருகில் சென்று அவன் மறைந்து நின்றான் என்பதைப் பார்த்தோம் அல்லவா? மந்திரவாதியும் நந்தினியும் என்ன பேசிக் கொண்டிருந்தார்கள் என்பதை அவன் முதலில் காது கொடுத்துக் கேட்க முயன்றான். ஆனால் அவர்களுடைய பேச்சு ஒன்றும் அவன் காதில் விழவில்லை. அதைக் கேட்டுத் தெரிந்து கொள்வதில் அவ்வளவாக அவனுக்குச் சிரத்தையும் இல்லை. நந்தினியிடம் பேசிக் கொண்டிருந்தபோது தன் அறிவு தன்னை விட்டு அகன்று ஒருவித போதை உணர்ச்சி உண்டாகியிருந்தது என்பதை இப்போது உணர்ந்தான். மறுபடியும் அவளைச் சந்திக்காமல் தப்பித்துக் கொண்டு போய்விட்டால் நல்லது. பழுவேட்டரையர்களிடம் அகப்பட்டுக் கொள்வதைக் காட்டிலும் இந்த இளைய ராணியிடம் அகப்பட்டுக் கொள்வதில் அபாயம் அதிகம் இருக்

கிறது. அவர்கள் முன்னிலையில் தன் அறிவு நன்றாய் இயங்குகிறது; தோள் வலி ஓங்குகிறது; அரையில் உள்ள கத்தியில் எப்போதும் கை இருக்கிறது. யுக்தியினாலும் ஒரு கை பார்க்கலாம்; கத்தியினாலும் ஒரு கை பார்க்கலாம். ஆனால் இந்த மோகினியின் முன்னால் புத்தி மயங்கி விடுகிறது; கையும் கத்தி பிடிக்கும் சக்தியை இழந்துவிடுகிறது. மீண்டும் இவள் முன்னால் சென்றால், என்ன நேருமோ என்னமோ? போதும் போதாததற்கு, மந்திரவாதி ஒருவனுடைய கூட்டுறவும் இவள் வைத்துக் கொண்டிருக்கிறாள்! இரண்டு பேரும் சேர்ந்து என்ன மாயமந்திரம் செய்வார்களோ? குந்தவைப் பிராட்டியிடந்தான் இவளுக்கு எவ்வளவு துவேஷம்? அந்த துவேஷம் இவளுடைய கண்களில் தீப்பொறியாக வெளிப்படுகிறதே! ஒரு வேளை மனதை மாற்றிக் கொண்டு பழுவேட்டரையரிடம் தன்னைப் பிடித்துக் கொடுத்தாலும் கொடுத்து விடலாம்! பெண்களின் சபல சித்தமும் சஞ்சல புத்தியும் பிரசித்தமானவை அல்லவா? ஆகையால் மீண்டும் இவளைச் சந்திக்காமல் தப்பித்துக் கொண்டு போய்விட்டால் நல்லது. ஆனால் எப்படி? தோட்டத்துக்குள் புகுந்துதான் வழி கண்டுபிடித்துப் போகவேண்டும்! மதிள் ஏறிக் குதிக்க வேண்டும்! மதிளுக்கு வெளியில் தன்னைத் தேடி வந்தவர்கள் காத்திருந்தால்?......வேறு ஏதேனும் உபாயம் இல்லையா? வந்தியத்தேவா! இத்தனை நாளும் உனக்கு உதவி செய்து வந்த அதிர்ஷ்டம் எங்கே போயிற்று? யோசி! யோசி! மூளையைச் செலுத்தி யோசி! கண்களையும் கொஞ்சம் உபயோகப்படுத்து! நாலாபக்கமும் பார்! இதோ இந்த இருள் அடைந்த மாளிகை இருக்கிறதே! இது ஏன் இருளடைந்திருக்கிறது? இதற்குள்ளே என்ன இருக்கும்? இதன் உள்ளே புகுந்தால் இதன் இன்னொரு வாசல் எங்கே கொண்டுபோய் விடும்? எல்லாவற்றுக்கும் இதற்குள் புகுந்து பார்த்துவைக்கலாமா? இப்போது உபயோகப்படாவிட்டாலும் வேறு ஒரு சமயத்துக்கு உபயோகப்படலாம். யார் கண்டது?

ஆனால், இதற்குள்ளே எப்படிப் பிரவேசிப்பது? எவ்வளவு பெரிய, பிரம்மாண்டமான கதவு! இதற்கு எவ்வளவு பெரிய பூட்டு! அப்பப்பா! என்ன அழுத்தம்! என்ன கெட்டி! ஆ! இது என்ன? கதவுக்குள் ஒரு சிறிய கதவு போலிருக்கிறதே! கையை வைத்ததும் இந்தச் சிறிய கதவு திறந்து கொள்கிறதே! அதிர்ஷ்டம் என்றால், இதுவல்லவா அதிர்ஷ்டம்! உள்ளே புகுந்து பார்க்க வேண்டியதுதான்!

பெரிய கதவுக்குள்ளே, பார்த்தால் தெரியாதபடி பொருத்தியிருந்த சிறிய கதவைத் திறந்துகொண்டு வந்தியத்தேவன் அந்த இருளடைந்த மாளிகைக்குள் புகுந்தான். உள்ளே காலடி வைத்ததும் அவனுக்குத் தோன்றிய முதல் எண்ணம், தான் அம்மாளிகைக்குள் புகுந்தது நந்தினிக்குத் தெரியக்கூடாது என்பதுதான். ஆகையால் சிறிய கதவைச் சாத்தினான். சாத்தியவுடன் உள்ளிருந்த இருள் இன்னும் பன்மடங்கு கனத்து விட்டதாகத் தோன்றியது. கதவு திறந்திருந்த ஒரு வினாடி நேரத்தில் சில பெரிய தூண்கள் நிற்பது தெரிந்தது. இப்போது அதுவும் தெரியவில்லை. இருட்டு என்றால், இப்படிப்பட்ட இருட்டைக் கற்பனை செய்யவும் முடியாது!......ச்சீ! வெளிச்சத்திலிருந்து இருட்டில் வந்திருப்பதால் முதலில் இப்படித்தான் இருக்கும். சற்றுப் போனால் இருட்டின் கனம் குறைந்து பொருள்கள் மங்கலாகக் கண்ணுக்குப் புலப்படும். இதை எத்தனையோ தடவை அநுபவத்தில் கண்டிருந்தும், இருளைக் கண்டு கலக்கம் ஏன்? சும்மா நிற்பதற்குப் பதில் கொஞ்சம் நடந்து பார்க்கலாம். கையினால் தடவிக் கொண்டே போகலாம். முதலில் தெரிந்த தூண் இப்போது இல்லாமல் எங்கே போய்விடும்?...... சற்றுத் தூரம் குருடனைப் போல் கையை முன்னால் நீட்டிக்கொண்டு வந்தியத்தேவன் நடந்தான். அவன் நினைத்தபடியே ஒரு தூண் கைக்குத் தட்டுப் பட்டது! ஆ! எவ்வளவு பெரிய தூண்! கருங்கல் தூண்! இதைச் சுற்றி வளைத்துக்கொண்டு மேலே போய்ப் பார்க்கலாம். மேலும் கொஞ்ச தூரம் நடந்ததும் இன்னொரு தூண் கைக்கு அகப்பட்டது. ஆனால் இன்னமும் கண்ணுக்கு ஏதும் தெரிந்தபாடாயில்லை. திடீரென்று கண் குரு

டாகப் போய் விட்டதா, என்ன? இது என்ன பைத்தியக்கார எண்ணம்! கண் திமிர் என்று எப்படிக் குருடாகும்? இன்னும் கொஞ்சம் நடந்து பார்க்கலாம். மேலே தூண் ஒன்றும் கைக்கு அகப்படவில்லை! ஏதோ பள்ளத்தில் இறங்குவது போன்ற உணர்ச்சி உண்டாகிறது! ஆ! இதோ ஒரு படி! நல்லவேளை, விழாமல் தப்பினோம்! இப்படியே இந்த இருட்டில் ஒன்றும் தெரியாமல் எத்தனை நேரம், எத்தனை தூரம் போவது? ......எதனாலோ வந்தியத்தேவன் மனதில் ஒரு பீதி உண்டாயிற்று. மேலே போகத் துணிவு ஏற்படவில்லை. வந்த வழியில் திரும்ப வேண்டியதுதான்! கதவைத்



திறந்து கொண்டு லதா மண்டபத்துக்கே போக வேண்டியதுதான்! இந்தப் பயங்கர இருட்டில் உழலுவதைக் காட்டிலும், நந்தினியை மீண்டும் எதிர்ப்பட்டு அவளுடைய யோசனைப்படி நடப்பதே நல்லது. என்ன வாக்குறுதி கேட்டாலும் இப்போதைக்குக் கொடுத்து விட்டால், பிறகு சமயம்போல் பார்த்துக் கொள்கிறது! இவ்வாறு எண்ணி வந்தியத்தேவன் திரும்பினான். ஆனால் திரும்பிச் செல்லும் வழி வந்த வழியேதானா? எப்படிச் சொல்ல முடியும்! ... நடக்க நடக்கக் கைக்கு ஒன்றும் தட்டுப்படவில்லையே! அந்தக் கருங்கல் தூண்கள் எங்கே போயின! கதவைக் கண்டு பிடிக்க முடியாமலே போய்விடுமோ? இரவெல்லாம் இந்த இருளில் இப்படியே சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருக்க நேரிடுமோ? கடவுளே! இது என்ன ஆபத்து! ......



ஆகா! இது என்ன ஓசை! சடசட வென்ற ஓசை! எங்கேயிருந்து வருகிறது! வெளவால்கள் சிறகை அடித்துக் கொள்ளும் ஓசையாக இருக்க வேண்டும். அவ்வளவு இருட்டில் வெளவால்கள் நிறையக் குடி கொண்டிருப்பது இயல்புதானே? இல்லை! இது வெளவால் இறகின் சத்தம் மட்டும் இல்லை! காலடிச் சத்தம்! யாரோ நடக்கும் சத்தம்!......நடப்பது யார்? மனிதர்கள்தானா? அல்லது...... வந்தியத்தேவனுடைய தொண்டை உலர்ந்துபோயிற்று! நா மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது! திடீரென்று யாரோ அவன் முகத்தில் இடித்தாற் போலிருந்தது. வந்தியத்தேவன் தன் சக்தியையெல்லாம் காட்டி ஒரு குத்து விட்டான்! குத்திய கை துண்டிக்கப் பட்டதுபோல வலித்தது. இன்னொரு கையினால் தொட்டுப் பார்த்தான். இருட்டில் கருங்கல் தூணின்பேரில் மோதிக் கொண்டதுமல்லாமல் அதைக் குத்தியதாகவும் தெரிந்து கொண்டான்! கையை அவ்வளவு 'விண், விண்' என்று வலித்திரா விட்டால் வந்தியத்தேவன் சிரித்தேயிருப்பான். ஆயினும் அதனால் அவனுடைய பயம் சிறிது அகன்றது.



முழுதும் அகலவில்லை. காது கொடுத்துக் கேட்டபோது அந்தக் காலடிச் சத்தம் மேலும் மேலும் கேட்டது. ஒருசமயம் எட்டிப் போவது போல இருந்தது! இன்னொரு சமயம் நெருங்கி வருவது போல் இருந்தது! வந்தியத்தேவன் நின்ற இடத்திலேயே நின்று உற்றுக் கேட்டான். அதே சமயத்தில் ஓசை வந்த திசையை நோக்கி அவனுடைய கண்களும் உற்றுப் பார்த்தன.

ஆ! வெளிச்சம்! அதோ வெளிச்சம்! கொஞ்சம் கொஞ்சமாக அதிகமாகி வருகிறது! நெருங்கியும் வருகிறது! வெளிச்சத்துடன் புகை! யாரோ தீவர்த்தியுடன் வருகிறார்கள். நந்தினி தான் தன்னைத் தேடிக்கொண்டு வருகிறாளோ, என்னமோ! அப்படியானால் நல்லது. வேறு யாராவதாயிருந்தால்? எல்லாவற்றுக்கும் சிறிது நேரம் ஒளிந்திருந்து பார்க்கலாம். ஒளிந்து நிற்பதற்கு இங்கே இடத்துக்குக் குறைவில்லை! தூரத்திலே வந்த தீவர்த்திக் கொழுந்து அது ஒரு விசாலமான மண்டபம் என்பதைக் காட்டியது. அதில் பெரிய பெரிய தூண்கள் இருந்தன. தூண்களில் பயங்கரமான பூதகணங்களின் வடிவங்கள் செதுக்கப்பட்டிருந்தன. கீழேயிருந்து ஒரு படிக்கட்டு மேலே வந்து அங்கே ஒரு வளைவு வளைந்து திரும்பி மேலேறிச் சென்றது. அந்தப் படிக்கட்டின் அடிப்பக்கத்திலிருந்து தான் தீவர்த்தி வெளிச்சம் வந்தது என்பதையும் அறிந்து கொண்டான். ஆகையால் வருவது நந்தினியாக இருக்கமுடியாது. 'பாதாளச் சிறை' என்று தான் கேள்விப்பட்டது இந்த இருண்ட மாளிகையின் அடியிலே தான் இருக்கிறதோ? ஒருவேளை அங்கிருந்து தான் யாரேனும் வருகிறார்களோ? பாதாளச் சிறையின் பயங்கரங்களைப் பற்றி வந்தியத்தேவன் அதிகம் கேள்விப்பட்டிருந்தபடியால், அந்த எண்ணம் அவனுடைய ரோமக் கால்களில் எல்லாம் வியர்வை துளிக்கும்படி செய்தது. அடுத்த கணம் ஒரு பெரிய தூணின் மறைவில் போய் நின்று கொண்டான். மகா தைரியசாலியான வந்தியத்தேவனுடைய கை கால்கள் எல்லாம் அச்சமயம் வெலவெலத்துப் போய் நடு நடுங்கின!

படிக்கட்டின் வழியாக மேலேறி மூன்று உருவங்கள் வந்தன. மூவரும் மனிதர்கள் தான். ஒருவன் கையில் தீவர்த்தியிருந்தது. இன்னொருவன் கையில் வேல் இருந்தது. நடுவில் வந்தவன் கையில் ஒன்றும் பிடித்திருக்கவில்லை. தீவர்த்தி வெளிச்சத்தில் அவர்கள் முகங்கள் புலப்பட்டதும் வந்தியத்தேவனுடைய பீதி அடியோடு அகன்றது. பீதியைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமான வியப்பு உண்டாயிற்று. அவர்களில் முன்னால் வந்தவன் வேறு யாரும் இல்லை; வந்தியத்தேவனுடைய பிரிய நண்பனாகிய கந்தமாறன் தான்! நடுவில் வந்த உருவம், முதலில், ஓர் அதிசயமான பிரமையை வந்தியத்தேவனுக்கு உண்டாக்கிற்று. பழுவூர் இளைய ராணியாகிய நந்தினிதான் வருகிறாள் என்று தோன்றியது. மறு கணத்திலேயே, அந்தப் பிரமை நீங்கியது. வருகிறவன் ஆண் மகன் என்று தெரிந்தது. கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் அரை குறையாகத் தான் பார்த்த இளவரசர் மதுராந்தகத் தேவர் என்பதை அறிந்து கொண்டான். மூன்றாவதாக, கையில் தீவர்த்தியுடன் வந்தவனை வல்லவரையன் முன்னால் பார்த்ததில்லை. அவன் வாசற் காவலனாகவோ, ஊழியக்காரனாகவோ இருக்க வேண்டும்.

வந்தியத் தேவனுடைய மூளை அதிவேகமாக வேலை செய்தது. அவர்கள் அந்தப் பாதாள வழியில் படிக்கட்டு ஏறி வருவதன் மர்மம் என்னவென்பது வெகு விரைவில் அவனுக்கு விளங்கிவிட்டது. பழுவூர் இளைய ராணி பல்லக்கில் ஏறி முதல் நாளே வந்துவிட்டாள். பெரிய பழுவேட்டரையர்

அன்றிரவு தஞ்சைக் கோட்டைக்குத் திருப்பிவிட்டார். இருவரும் கோட்டை வாசல் வழியாகப் பகிரங்கமாக வந்து விட்டார்கள். ஆனால், மதுராந்தகத் தேவர் வெளியில் போனதும் தெரியக் கூடாது; திரும்பி வருவதும் தெரியக் கூடாது. அதற்காக இந்த இரகசியச் சுரங்க வழியைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். இந்த இருளடைந்த மாளிகையின் மர்மமே இதுதான் போலும்! கந்தமாறன் தன்னைக் கொள்ளிடக் கரையில் விட்டுப் பிரிந்த பின்னர், வேறு எங்கேயோ ஓரிடத்தில் பெரிய பழுவேட்டரையருடன் சேர்ந்திருக்கிறான். இந்த அந்தரங்க வேலைக்கு அவனைப் பழுவேட்டரையர் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். மதுராந்தகத் தேவரைச் சுரங்க வழியில் அழைத்துச் செல்லத் துணையாக அனுப்பி வைத்திருக்கிறார். ஆகா! இப்போது நினைத்துப் பார்த்தால் ஞாபகம் வருகிறது. "எனக்குக் கூடத் தஞ்சாவூரில் ஒரு வேலை இருக்கிறது. நானும் அங்கே வந்தாலும் வருவேன்!" என்று கந்தமாறன் சொன்னான் அல்லவா?.........இப்போது இங்கே திடீர் என்று தான் கந்தமாறன் முன்னால் போய் நின்றால், அவன் என்ன செய்வான்?...இந்த எண்ணம் தோன்றியவுடனேயே அதை வல்லவரையன் மாற்றிக் கொண்டான். இந்தச் சமயத்தில் கந்தமாறன் முன்னால் தான் எதிர்ப்பட்டால், அவன் செய்துள்ள சபதத்தை முன்னிட்டுத் தன்னைக் கொல்ல நேரிடும்; அல்லது தான் அவனைக் கொல்ல நேரும். அப்படிப்பட்ட தர்ம சங்கடத்தை எதற்காக வருவித்துக் கொள்ள வேண்டும்?......

இதற்குள் அந்த மூவரும் படிக்கட்டில் மேலேறிப் போய்விட்டார்கள். வெளிச்சமும் வர வர மங்கத் தொடங்கியது. அவர்களைப் பின்தொடர்ந்து போகலாமா என்று வந்தியத்தேவன் ஒருகணம் நினைத்து, அதையும் உடனே மாற்றிக் கொண்டான். அவர்கள் கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையரின் அரண்மனைக்குப் போகிறார்கள் என்பது நிச்சயம். அங்கே தான் திரும்பிப் போவதில் என்ன பயன்? சிங்கத்தின் குகையிலிருந்து தப்பித்து வந்தபிறகு மறுபடியும் போய் சிங்கத்தின் வாயில் தலையைக் கொடுப்பது போலத்தான்! இனித் திரும்ப நந்தினி இருந்த லதா மண்டபத்துக்குப் போவதிலும் பயன் இல்லை. ஒருவேளை பெரிய பழுவேட்டரையர் இதற்குள் அங்கு வந்திருக்கலாம். அதுவும் அபாயகரந்தான். வேறு என்ன செய்யலாம்?......ஏன்? இந்தப் படிக்கட்டு வழியாக இறங்கிப் போய்ப் பார்த்தால் என்ன? இவ்விதம் எண்ணி நம் வாலிப வீரன் அந்தச் சுரங்கப்படிக்கட்டில் இறங்கினான்.

## அத்தியாயம் 41

# நிலவறை

இருண்ட சுரங்கப் பாதையில் வந்தியத்தேவன் காலை ஊன்றி வைத்து விழுந்து விடாமல் நடந்தான். படிகள் கொஞ்ச தூரம் கீழே இறங்கின. பிறகு சம நிலமாயிருந்தது. மறுபடியும் படிகள். மீண்டும் சம தரை. இரண்டு கைகளையும் எட்டி விரித்துப் பார்த்தான். சுவர் தட்டுப்படவில்லை. ஆகவே, அந்தச் சுரங்க வழி விசாலமானதாகவே இருக்க வேண்டும். மறுபடி சற்றுத் தூரம் போனதும் படிகள் மேலே ஏறின. வளைந்து செல்வதாகவும் தோன்றியது. அப்பப்பா! இத்தகைய கும்மிருட்டில் தட்டுத் தடுமாறி இன்னும் எத்தனை தூரம் நடக்க வேண்டுமோ தெரியவில்லையே!

ஆகா! இது என்ன? இருள் சிறிது குறைந்து வருகிறதே! மிக மிக மங்கலான ஒளி தோன்றுகிறதே! இந்த மங்கிய ஒளி எப்படி எங்கிருந்து வருகிறது? மேலே கூரையில் எங்கிருந்தாவது வரும் நிலவின் ஒளியா? அல்லது சுவர்களில் உள்ள பலகணி வழியாக வரும் ஒளியா? மறைவான இடத்தில் வைத்திருக்கும் விளக்கிலிருந்து பரவும் ஒளியா?......

இல்லை, இல்லை! இது என்ன அற்புதம்? நம் கண் முன்னால் தெரியும் இந்தக் காட்சி மெய்யான காட்சி

தானோ? அல்லது நமது மூளை கலங்கியதால் ஏற்பட்ட தோற்றமா?



அது ஒரு விசாலமான மண்டபம். கல்லைக் குடைந்து எடுத்து அமைத்த நிலவறை மண்டபம். அதனாலேதான் தலையை இடித்து விடும் போல் அவ்வளவு தாழ்வாகச் சமமட்டமான மேல்தளம் அமைந்திருக்கிறது. அந்த நிலவறையில் குடிகொண்டுள்ள மங்கிய நிலவொளி வெளியிலிருந்து வருவது அல்ல; கூரை வழியாகவோ பலகணி வழியாகவோ வருவதும் அல்ல. அங்கங்கே அந்த நிலவறையில் கும்பல் கும்பலாகவும் சில இடங்களில் பரவலாகவும் கிடக்கும் பொருள்களிலிருந்து வருகிறது. ஆ! அப்படி நிலவொளி வீசும் அப் பொருள்கள் எத்தகைய பொருள்கள்! ஒரு மூலையில் மணி மகுடங்கள்; முத்தும் மணியும் வைரமும் பதித்த மகுடங்கள்; இன்னொரு பக்கத்தில் ஹாரங்கள்; முத்து வடங்கள்; நவரத்தின மாலைகள். அதோ அந்த வாயகன்ற அண்டாவில் என்ன? கடவுளே! அவ்வளவும் புன்னை மொட்டுக்களைப் போன்ற வெண் முத்துக்கள்! குண்டு குண்டான கெட்டி முத்துக்கள்! அதோ அந்தப் பானையில் பளபள வென்று மஞ்சள் வெயில் வீசும் பொற் காசுகள். இதோ இங்கே குவிந்து கிடப்பவை தங்கக் கட்டிகள். தஞ்சை அரண்மனையின் நிலவறைப் பொக்கிஷம் இதுதான் போலும்! தனாதிகாரி பழுவேட்டரையரின் மாளிகையை யொட்டி இந்த இருள் மாளிகையும் அதில் இந்தப் பொக்கிஷ நிலவறையும் இருப்பதில் வியப்பில்லை யல்லவா? அம்மம்மா! இந்த நிலவறைக்குள் நாம் வந்து சேர்ந்தோமே? இது நம்முடைய பாக்கியமே யல்லவா? பாக்கிய லக்ஷ்மியும் அதிர்ஷ்ட தேவதையும் சேர்ந்தல்லவா நம்மை இங்கே கொண்டு வந்து சேர்த்திருக்கிறார்கள்? எப்படிப்பட்ட அதிசயமான, அபூர்வமான இரகசியத்தை, நம்முடைய முயற்சி ஒன்றும் இல்லாமலே நாம் தெரிந்து கொண்டோம்! இதை எப்படிப் பயன் படுத்துவது? பயன் படுத்துவது அப்புறம் இருக்கட்டும்; இங்கிருந்து போவதற்கே மனம் வராதுபோலிருக்கிறதே! இங்கேயே சுற்றிச் சுழன்று கொண்டிருக்கலாம் போலத் தோன்றுகிறதே! இங்கேயே இருந்தால் பசி, தாகம் தெரியாது! உறக்கம் அருகிலும் அணுகாது! நூறு வருஷ காலமாகச் சோழ நாட்டு வீர சைன்யங்கள் அடைந்த வெற்றிகளின் பலன்கள் எல்லாம் இங்கே இருக்கின்றன. நவநிதி என்று சொல்வார்களே; அவ்வளவும் இங்கே இருக்கிறது! குபேரனுடைய பொக்கிஷத்தையும் தோற்கடிக்கும் செல்வக் களஞ்சியம் இங்கே இருக்கிறது! இதை விட்டு எதற்காகப் போகவேண்டும்!

வந்தியத்தேவன் அந்த நிலவறையைச் சுற்றிச் சுற்றி வந்தான். ஒரு மூலையில் கிடந்த மணி மகுடங்களைத் தொட்டுப் பார்த்தான். இன்னொரு பக்கத்தில் கிடந்த ரத்தின ஹாரங்களைக் கையில் எடுத்துப் பார்த்தான். அவற்றைப் போட்டுவிட்டு இன்னொரு பக்கம் சென்று செப்புப் பானையில் நிறைந்திருந்த முத்துக்களில் கைகளை விட்டு அளைந்தான். வேறொரு பானையில் கையை விட்டுப் பொற்காசுகளை அள்ளிச் சொரிந்தான். ஒரு மூலையில் தரையில் பளபள வென்று ஏதோ பரவலாக ஜொலிப்பதைக் கண்டு அங்கே சென்றான். முதலில் என்ன வென்று தெரியவில்லை. பிறகு, குனிந்து உற்றுப் பார்த்தான். ஐயோ! ஆண்டவனே! அது ஓர் எலும்புக் கூடு! ஒரு காலத்தில் சதையும் இரத்தமும் தோலும் ரோமமும் மூக்கும் முகமும் கண்ணும் காதுமாக இருந்த மனித உடலின் எலும்புக்கூடு!

ஆ! இந்த எலும்புக்கூடு அசைகிறதே! உயிர் பெற்று எழுகிறதே!

பொற்காசுகளைப் போலவே சத்த மிடுகிறதே! நமக்கு ஏதோ சேதி சொல்ல எழுந்திருப்பதாய்க் காண்கிறதே!...வல்லவரையனுடைய உடம்பிலிருந்த ஒவ்வொரு ரோமமும் குத்திட்டு நின்றது. தனக்குப் பைத்தியந்தான் பிடித்து விட்டது என்று நினைத்தான். ச்சீ! எலும்புக்கூடு எழுந்திருக்கவில்லை! அதற்குள்ளே யிருந்து ஒரு பெருச்சாளி ஓடி வருகிறது! நம் கால் மீது விழுந்து ஓடுகிறது!... ஆம்; இப்போது பார்த்தால் எலும்புக்கூடு தரையிலேதான் விழுந்து கிடக்கிறது! ஆனால் அது நமக்கு ஒரு சேதி சொல்லுகிறது என்பது உண்மை. "ஓடிப் போ! இங்கே தாமதியாதே! நானும் உன்னைப்போல் உடல் படைத்த மனிதனாயிருந்தேன். இங்கு வந்து அகப்பட்டுக் கொண்டேன். இங்கேயே மாண்டு மடிந்தேன்! இப்போது எலும்புக் கூடாகக் கிடக்கிறேன்! ஓடிப் போ!" என்று அது நம்மை எச்சரிக்கிறது. இங்கிருந்து உடனே தப்பிச் சென்றேமோ, பிழைத்தோம். இல்லாவிட்டால் அதோ கதிதான்; அந்த மனிதனுக்கு ஏற்பட்ட கதிதான்.

வந்தியத்தேவன் அந்த நிலவறையிலிருந்து வெளியேற எண்ணினான். ஆனால் வெளியேறும் வழிதான் தெரியவில்லை. வந்த வழியைக் கண்டு பிடிக்க முடியவில்லை. நிலவறையின் ஓரமாக எங்கே போனாலும் இருள் என்னும் பூதம் வாயைப் பிளந்து கொண்டிருந்தது. கீழே பார்த்தால் அதல பாதாளப் படுகுழியாகத் தோன்றியது. ஏறி வந்த படிக்கட்டு எங்கேயோ ஓரிடத்தில் இருக்கத்தான் வேண்டும். அதைக் கண்டு பிடிக்க வந்தியத்தேவன் மேலும் முயன்றான். தேடித் தேடி அலைந்தான். அப்படி அலையும் போது ஓரிடத்தில் சுவர் ஓரமாக ஒரு குப்பல் தங்கக் காசுகள் கிடப்பதைக் கண்டான். அந்தக் குப்பலின் மீது ஏதோ வலை பின்னியது போலிருந்தது. உற்றுப் பார்த்தபோது, அக்குவியலின் பேரில் சிலந்தி வலை கட்டியிருப்பதாகத் தெரிந்தது. சிலந்தியின் வலை அவனது சிந்தனையைத் தூண்டியது.



பெரியோர்கள் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசைகளைச் சிலந்தி வலைக்கு ஒப்பிட்டிருக்கிறார்கள். வலையை விரித்துக் கொண்டு சிலந்தி காத்திருக்கிறது. எங்கிருந்தோ பறந்து வந்து ஈ அதில் அகப்பட்டுக் கொள்கிறது. பிறகு சிறிது சிறிதாகச் சிலந்தி ஈயை இழுத்து விழுங்குகிறது. மூன்று வித ஆசைகளும் அப்படித்தான். மனிதன் வழி தவறிச் சென்று அந்த ஆசை வலைகளில் விழுந்து அகப்பட்டுக் கொள்கிறான்; அப்புறம் மீளுவதில்லை! மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஆகிய மூன்று ஆசைகளின் இயல்பையும் அன்று ஒரே நாளில் நாம் அநுபவித்தாகி விட்டது. நந்தினி என்னும் பழுவூர் இளையராணி தன்னுடைய வலையில் நம்மை அகப்படுத்தப் பார்த்தாள். பழைய வாணர் குல ராஜ்யத்தை அடையலாம் என்னும் மண்ணாசையும் காட்டினான். கடைசியாக, இங்கே இந்தப் பயங்கரமான பொன்னாசைப் பூதம் நம்மை அடியோடு விழுங்கப் பார்க்கிறது. முதல் இரண்டிலிருந்தும் தப்பினோம். இந்த மூன்றாவது அபாயத்திலிருந்தும் தப்ப வேண்டும். நமக்கு எதற்காக இந்த வம்பெல்லாம்? இராஜ்யம் எதற்கு? செல்வம் எதற்கு? பெண்களின் கூட்டுறவுதான் எதற்காக? வானத்தைக் கூரையாகப் பெற்ற அகண்டமான பூமியே நமது அரண்மனை! "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்று பண்டைத் தமிழ் நாட்டுப் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்களே! எல்லா ஊரும் நம்முடைய ஊர்தான். எல்லா மனிதர்களும் நம்முடைய உறவினர்கள்தான். ஊர் ஊராகப் போக வேண்டியது; புது வெள்ளம் பொங்கி வரும் நதிகளையும், புதிய இலைகள் தளிர்த்து விளங்கும் மரங்களையும், பல வர்ணப் பட்சிகளையும், மான்களையும் மயில்களையும், மலைகளையும் மலைகளின் சிகரங்களையும், வானத்தையும் மேகத்தையும், கடலையும் கடல் அலைகளையும் பார்த்துக் களிக்க வேண்டியது; பசிக்கு உணவு கிடைக்கின்ற இடத்திலே

உண்ண வேண்டியது; உறக்கம் வந்த இடத்தில் உறங்க வேண்டியது! ஆகா! இது வல்லவா இன்ப வாழ்க்கை! எளிதில் கிடைக்கக்கூடிய இத்தகைய ஆனந்த வாழ்க்கையை விட்டுவிட்டு, தொல்லைகளும் சூழ்ச்சிகளும் ஆசைகளும் அபாயங்களும் நிறைந்த வாழ்க்கையை ஏன் மேற்கொள்ள வேண்டும்? எப்படியாவது இந்த நிலவறையை விட்டு இப்போது வெளியேறிவிட்டால் போதும்; பிறகு இந்த இருள் மாளிகையையும் இந்தத் தஞ்சை ஊர்க் கோட்டையையும் விட்டு வெளியேறிவிட வேண்டும். பின்னர், இத்தகைய தொல்லைகளில் என்றைக்கும் அகப்பட்டுக் கொள்ளவே கூடாது.......

ஆகா! கதவு திறந்து மூடும் ஓசை!... மறுபடியும் காலடி ஓசை!... இன்றைய இரவின் அதிசயங்களுக்கு முடிவே கிடையாது போலும்! அதிசயங்களுக்கும் அளவில்லை; பயங்கரங்களுக்கும் எல்லையில்லை! இம்முறை வெகு தூரத்திலிருந்து அந்தக் காலடிச் சத்தங்கள் கேட்டன. இரண்டு பக்கங்களிலிருந்தும் வருவதாகத் தோன்றியது. வந்தியத்தேவன் காது கொடுத்துக் கவனமாகக் கேட்டான். பொக்கிஷ நிலவறைக்கு நாலு புறமும் சூழ்ந்திருந்த இருளைக் கிழித்துக் கொண்டு பார்ப்பவனைப் போல் உற்றுப் பார்த்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் அவன் எதிர்பார்த்தது போலவே அபூர்வமான காட்சியைக் கண்டான்.

கூத்து மேடையிலிருந்து மிகத் தொலைவிலே உட்கார்ந்திருப்பவனுக்கு மேடையில் தோன்றும் காட்சிகள் எப்படியிருக்குமோ அப்படியிருந்தது வந்தியத்தேவன் அப்போது கண்ட காட்சி. அவன் அச்சமயம் இருந்த இடத்துக்கு உயரமான ஓர் இடத்தில், தொலை தூரம் என்று தோன்றிய தூரத்தில், அது நடந்தது.

கூத்து மேடையின் ஒரு பக்கத்திலிருந்து ஒரு தீவர்த்தி வந்தது. இன்னொரு புறத்துப் பக்கம் படுதாவை நீக்கிக் கொண்டு மற்றொரு தீவர்த்தி வந்தது. தீவர்த்திகள் இரண்டும் நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருந்தன. ஒரு தீவர்த்தி வெளிச்சத்தில் இரு நெடிய கரிய உருவங்கள் தோன்றின. இன்னொரு தீவர்த்தியின் ஒளியில் மற்றும் இரு உருவங்கள் காணப்பட்டன. அவற்றில் ஒன்று நெடிய கம்பீரமான உருவம்; மற்றொன்று சிறிது குட்டையான மெல்லிய வடிவம். இரு தரப்பு உருவங்களும் ஒன்றையொன்று நெருங்கி வந்துகொண்டிருந்தன. வந்தியத்தேவன் மேலும் கண் விழிகள் பிதுங்கும்படி உற்றுப் பார்த்து அந்த உருவங்கள் யாருடையவை என்பதை ஒருவாறு தெரிந்து கொண்டான். இடது பக்கத்திலிருந்து வந்த இரு உருவங்கள் மதுராந்தகத் தேவரை அழைத்துச் சென்ற கந்தமாறனும் காவலனும்; வலது புறத்திலிருந்து வந்த உருவங்கள் பெரிய பழுவேட்டரையரும் அவருடைய இளையராணி நந்தினி தேவியும்.

இந்த இரு கோஷ்டியாரும் சந்திக்கும்போது என்ன நடக்கும்? ஏதாவது விபரீதமாக நடக்குமா? அல்லது ஒருவருக்கொருவர் வழி விட்டு விட்டுச் சாவதானமாகப் போய் விடுவார்களா?...வந்தியத்தேவன் அந்தப் பரபரப்பில் மூச்சு விடுவதைக் கூட நிறுத்திக் கொண்டு அத்தனை கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

இரு கோஷ்டியாரும் சந்தித்தார்கள். அவர்கள் தடுமாறித் தயங்கி நின்றதிலிருந்து இரு சாராருக்கும் அச்சந்திப்பு வியப்பையும் திகைப்பையும் அளித்திருக்க வேண்டுமென்று தோன்றியது. ஆனால் விபரீதம் ஒன்றும் நேர்ந்து விடவில்லை. பழுவேட்டரையர் கந்தமாறனைப் பார்த்து ஏதோ கேட்டார். அதற்குக் கந்தமாறன் ஏதோ விடை சொன்னான். கேள்வியும் விடையும் என்னவென்பது வந்தியத்தேவனின் காதில் விழவில்லை. பிறகு, பழுவேட்டரையர் கையினால் சமிக்ஞை செய்து சுரங்க வழியின் படிக்கட்டைச் சுட்டிக் காட்டினார். கந்தமாறன் அவரைப் பணிவுடன் வணங்கினான். வணங்கி விட்டுப் படிக்கட்டில் இறங்கினான். அவனுக்குப் பின் கையில் தீவர்த்தியுடன் வந்த காவலனைப் பார்த்துப் பழுவேட்டரையர் ஏதோ சமிக்ஞை செய்தார். அவனும் மறுமொழி சொல்லாமல் ஒரு கையினால் வாயைப் பொத்திக் கொண்டு வணங்கினான். பிறகு கந்தமாறனைத் தொடர்ந்து படிக்கட்டில் இறங்கினான்.

பழுவேட்டரையரும் இளையராணியும் இடதுபக்கம் நோக்கிச் சென்றார்கள்.

நிழலாட்டத்தையும் பொம்மலாட்டத்தையும் ஒத்த மேற்கூறிய நிகழ்ச்சிகள் எல்லாம் சில கண நேரத்தில் நடந்து விட்டன. இவ்வளவும் சுரங்க வழியில் இறங்கும் படிக்கட்டின் அருகில் நிகழ்ந்தன என்பதை வந்தியத்தேவன் கவனித்துக் கொண்டான். ஆகா! நாம வழியில் எங்கும் நில்லாமல் இந்த நிலவறையில் வந்து சுற்றிச் சுழன்று கொண்டிருந்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று! நான் மட்டும் அந்த இரு கோஷ்டிக்கும் நடுவில் அகப்பட்டுக் கொண்டிருந்தால் நம் கதி என்னவாயிருக்கும்? ஏதோ அந்த மட்டுக்கும் பிழைத்தோம். அடுத்தபடி என்ன? தப்பித்துக் கொள்ள வழி என்ன? கந்தமாறன் மதுராந்தகத் தேவரை அழைத்து வந்த சுரங்க வழியில் திரும்பிச் செல்கிறான் என்பதில் ஐயமில்லை. அந்த வழியிலிருந்து நாம் சிறிது விலகி இந்தப் பொக்கிஷ நிலவறைக்கு வந்திருக்க வேண்டும். இப்போது கந்தமாறன் போகும் வழியைத் தொடர்ந்து சென்றால், எப்படியும் வெளியேறும் வாசலைக் கண்டு கொள்ளலாம். பிறகு ஏதேனும் உபாயம் செய்து தப்பிக்கலாம். அப்படி அவசியம் நேர்ந்தால், கந்தமாறனிடமே உதவி கேட்கலாம். இல்லாவிட்டால் அவனையும் அந்தக் காவலனையும் ஒருகை பார்த்துவிட்டுத் தப்பிச் செல்லலாம். எனவே, கந்தமாறனை இப்போது பின் தொடரலாம்.

முதலில், தீவர்த்தி வெளிச்சம் நிலவறைக்கு அருகில் வருவது போலிருந்தது. வந்தியத்தேவன் மூச்சைப் பிடித்துக்கொண்டு நின்றான். பிறகு அவ் வெளிச்சம் அகன்று செல்வதுபோலிருந்தது. அதற்குள் வந்தியத் தேவன் சுற்றுமுற்றும் பார்த்துத் தான் அந்த நிலவறைக்குள் பிரவேசித்த படிக்கட்டு எது என்பதை அறிந்து கொண்டான். அதன் வழியாகக் கீழே இறங்கி மீண்டும் மேலேறினான். தீவர்த்தி வெளிச்சத்தை விட்டு விடாமல், அதிகமாகவும் நெருங்காமல், காலடி ஓசை கேட்காதபடி மெதுவாக அடிவைத்து நடந்து சென்றான். வளைந்தும் நெளிந்தும் சுற்றியும் சுழன்றும் ஏறியும் இறங்கியும் சென்ற அந்தச் சுரங்கப் பாதையில் நாமாக இருளில் நடந்து வழி கண்டு பிடித்துப் போவது எவ்வளவு அசாத்தியமான காரியம்! வாழ்க கந்தமாறன்! அவன் இப்போது தன்னையறியாமல் நமக்குச் செய்யும் உதவிக்கு எப்போது என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்!......

அதற்கு ஒரு சந்தர்ப்பம் அவ்வளவு சீக்கிரத்திலேயே கிடைக்கும் என்று வந்தியத்தேவன் எண்ணவேயில்லை!...

சுரங்கப் பாதையின் முடிவு வந்து விட்டது. எதிரில் ஒரு பெருஞ் சுவர் தெரிந்தது. அதில் ஒரு வாசலோ, கதவோ இருக்கும் என்று யாரும் கருத முடியாது. ஆயினும் இருக்கத் தான் வேண்டும்! சுரங்கப் பாதைக்கு ஒரு இரகசிய வாசல் இருந்தே தீர வேண்டுமல்லவா?

காவலன் தன் வலது கையிலிருந்த தீவர்த்தியை இடது கைக்கு மாற்றிக் கொள்கிறான். வலது கையினால் சுவரில் ஓரிடத்தில் கைவைத்து ஏதோ செய்கிறான். திருகாணியைத் திருகுவதுபோல் திருகுகிறான். சுவரில் மெல்லிய கோடுபோல் ஒரு பிளவு தோன்றுகிறது. அப்பிளவு வரவரப் பெரிதாகி வருகிறது. ஒரு ஆள் நுழையும்படியான பிளவாகிறது. காவலன் ஒரு கையினால் அதைச் சுட்டிக் காட்டுகிறான். கந்தமாறன் அவனிடம் ஏதோ சொல்லிவிட்டுச் சுவரில் தோன்றிய பிளவில் ஒரு காலை வைக்கிறான். ஒரு கால் இன்னும் சுரங்கப் பாதையிலே தான் இருக்கிறது. இப்பொழுது அவனுடைய முதுகுப் பிரதேசம் முழுதும் புலனாகிறது.

ஆகா! இது என்ன? இந்தக் காவலன் என்ன செய்கிறான்? அரையில் செருகியிருந்த கூரிய வளைந்த சிறு கத்தியை எடுக்கிறானே? கடவுளே! கந்த மாறனுடைய முதுகில் ஓங்கிக் குத்தி விட்டானே? படு பாதகன்! ஒருவனுக்குப் பின்னாலிருந்து முதுகில் குத்தும் சண்டாளன்!......

வந்தியத் தேவன் தான் ஒதுங்கி நின்று கொண்டிருந்த இடத்திலிருந்து வெளிவந்தான். ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தான்! அந்தச் சத்தத்தைக் கேட்டுக் காவலன் திரும்பினான்! தீவர்த்தியின் ஒளி வந்தியத்தேவனின் கோபாவேச முகத்தில் விழுந்தது! (தொடரும்)

# அக்கப்போர்

"பலாத்காரத்தை அடியோடு கைவிட வேண்டும்." —ஒரு தலைவர்.

பலாத்காரத்தை அடியோடு கைவிடுவதே பலாத்காரமல்லவா என்று கேட்கிறார் ஒருவர்!

★

"இந்தியா முழுதும் ரேஷன் வெட்டுக்குக் காரணம் என்ன தெரியுமா!" —ஒரு மந்திரி.

தெரியும், வெட்டுக்கிளிகள் அட்டூழியம் தான் ரேஷன் வெட்டுக்குக் காரணம்.

★

"பாரா பஜாரில் பகல் கொள்ளை நடக்கது." —கல்கத்தா செய்தி.

போலீஸ் பாரா என்ன செய்து கொண்டிருந்ததோ!

★

"நேருஜிக்குக் குடியரசு தினப் பரிசாக ஒரு குடியானவன் கட்டில் ஒன்றை அளித்தான்." —புதுடில்லிச் செய்தி

அந்தப் பரிசுக் கட்டிலில் நேருஜி அவர்கள் சற்று நிம்மதியாகப் படுத்துத் தூங்குவதற்கு அந்தக் குடியானவன் ஒன்று செய்யவேண்டும். அடுத்த குடியரசு தினத்திற்குள் நம் நாட்டுக்குத் தேவையான உணவுப் பொருள்களை விளைவிக்க வேண்டும்.

★

"தானத்தில் சிறந்தது எது என்றால் நிதானம்தான்." —ஒரு பிரசங்கி

"தானத்தில் சிறந்தது சமாதானம்தான்." —ஒரு சமாதானப் பிரியர்

★

"காந்திஜியை சர்க்கார் மறந்து விட்டார்கள்." —ஒரு பிரசங்கி

"ஆமாம், சென்ற ஜனவரி 30-ஆம் தேதியன்று சர்க்கார் காரியாலயங்களுக்கு விடுமுறை விடாததிலிருந்து தெரியவில்லையா!" என்கிறார் ஒரு குமாஸ்தா.

★

சென்னையிலுள்ள வெளியூர் பஸ் ஸ்டாண்டுகளில் பிரயாணிகளுக்குப் பஸ் பிரயாணம் சம்பந்தமான தகவல்கள் எல்லாம் கிடைக்கும்படி செய்ய வேண்டும் என்று ஒருவர் நகரசபை கமிஷனரைக் கேட்டுக் கொண்டு இருக்கிறார் என்று ஒரு செய்தி கூறுகிறது.

பஸ்களை கிடைக்கும்படி செய்தால் இன்னும் உபயோகமாக இருக்கும் என்கிறார் ஒரு பஸ் பிரயாணி.

★

"பரீட்சார்த்தமாக அணுகுண்டு வீச்சு. அமெரிக்காவின் ஒத்திகை." —செய்தித் தலைப்புகள்

இந்தப் பரீட்சார்த்த ஒத்திகையைத்தான் கொரியாவில் நடத்திப் பார்க்க வேண்டுமென்று ட்ருமன் துடித்துக் கொண்டிருந்தார் போலிருக்கிறது!

"தர்மபுரியில் அரிசிக் கஷ்டம் இல்லை." —தர்மபுரி செய்தி

இத்தகைய நிலைமை எந்த தர்மவான் புரிந்த தர்மமோ, அவரை வாழ்த்துகிறோம்.

★

"டில்லியில் சாந்தினி சௌக்கில் உள்ள எழுபது அடி உயர மணிக்கூண்டு திடீரென்று சரிந்து விழுந்தது." —டில்லிச் செய்தி

"இந்த மணிக்கூண்டின் கடிகாரம் சரியான மணி காட்டுகிறதே" என்று யாராவது வழிப்போக்கர்கள் சொன்ன வார்த்தையைக் கேட்டு மணிக்கூண்டு மூர்ச்சையடைந்து விழுந்திருக்க வேண்டும்!

★

"கோழிக்கோடுக்கருகில் உள்ள ஒரு ஊரில் ஒரு ஸ்திரீயை ஒரு சர்ப்பம் சதா பின் தொடருகிறதாம்!" —ஒரு செய்தி

சர்ப்பம் ஆனாலும் இப்படி அசந்தர்ப்பமாக நடந்து கொள்ளுவது நன்றாக இல்லை.

★

காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ தாண்டன் அவர்களுடைய அறையில் திருடன் புகுந்து அங்கு தஸ்தாவேஜுகளும், சர்க்காவும் தவிர வேறு ஒன்றும் இல்லாததைக் கண்டு அவைகளை அப்படியே போட்டு விட்டு ஓடிப்போய் விட்டானாம்.

ஸ்ரீ தாண்டனுடைய அறைக்குள்தான் பிரவேசிக்க எடுத்துக் கொண்ட முயற்சிகள் எல்லாம் தண்டமானது குறித்துத் திருடனுக்கு வருத்தமாகத்தான் இருக்கும்.

★

"உத்தரப் பிரதேசத்தில் மதுவிலக்குப் பிரதேசங்களில் சமூக அபிவிருத்தி வேலைகளுக்கு சர்க்கார் ஆக்கம் அளித்து வருகின்றனர்." —லக்ஷ்மணபுரி செய்தி

உ. பி. யில் மதுவிலக்குத் திட்டத்தை யாரும் திட்ட முற்படாமல் சர்க்கார் சமூக அபிவிருத்திக்கு ஆக்கம் அளிப்பதை நமது அதிட்டம் என்று கருதி உ. பி. மக்கள் நடந்து கொள்வார்கள் என எதிர்பார்க்கலாம்.

★

"பெண்களும் விமானம் ஓட்ட முன் வர வேண்டும்." —ஒரு தலைவர்

பாராசூட்களை பலவித வர்ணங்களில் தயாரித்தால் பெண்கள் முன் வரலாம்.

★

பம்பாய் கார்ப்பரேஷன் டிராம், பஸ் நிர்வாகத்தை நடத்துவதைப் போல டாக்ஸி நிர்வாகத்தையும் ஏற்று நடத்தலாம் என்று மேற்படி கார்ப்பரேஷனுக்கு ஒருவர் யோசனை கூறி இருக்கிறாராம்.

இனி, அவசர காரியங்களுக்கு டாக்ஸிகளையும் நம்பிப் பிரயோஜனமில்லை என்ற நிலைமை ஏற்பட்டுவிடும் என்கிறார் ஒரு (சென்னை வாசி.


திறமை மிக்க வேலைப்பாடு
வெகு நாள் மறையாது
திகழ்கிறது
திருச்சி மலைக் கோட்டை
236 அடி உயரம்
கி.பி. 17-ம்
நூற்றாண்டில் நிர்மா
ணிக்கப்பட்டது
Stanes
'ஸ்டேன்ஸ்'
சிகப்பு லேபில்
சுத்தமான காப்பி
தி யுனைடெட்
காப்பி ஸப்ளை
கம்பெனி
லிமிடெட்
கோயம்புத்தூர்,
தென் இந்தியா
மெர்ச்சண்ட்
விஜயவாடாவிற்கு ஏஜண்டு :
மிஸ்டர். S. Ch. மல்லப்பராஜு

விருதுநகர் ஹிந்து நாடார்கள்

செந்திக்குமார நாடார் காலேஜ் கட்டிட நிதிக்காக



## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

உதவும் சங்கீதக் கச்சேரி

○●○

ஸ்ரீ ஆர். கே. வெங்கட்ராம சாஸ்திரி ... வயலின்
கல்பாத்தி ஸ்ரீ ராமநாதன் ... மிருதங்கம்
ஆலங்குடி ஸ்ரீ ராமசந்திரன் ... கடம்

○●○

*13 – 4 – 1951* வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு

விருதுநகர் க்ஷத்திரியப் பெண் பாடசாலையில் அமைக்கப்பட்டிருக்கும் விஸ்தாரமான பந்தலில் நடைபெறும்

டிக்கட்டுகள் : ரூ. 250/-, 100/-, 50/-, 25/- & ரூ. 10/-

வே. வ. இராமசாமி,
கரஸ்பாண்டெண்ட் & காரியதரிசி

# 14 நாட்களில் நீங்களும் அழகிய சருமத்தை அடையலாம் என்று டாக்டர்கள் நிரூபிக்கின்றனர்




பாமோலிவ் அழகுத்திட்டம் வெவ்வேறு வயதுள்ள வெவ்வேறு சருமத்தை உடைய 1418 ஸ்திரீகளிடம் உபயோகிக்கப்பட்டு பரிசோதிக்கப்பட்டது. 14 நாட்களில் மூன்று பேர்களில் இருவர் அழகிய சருமத்தைப் பெற்றனர்.

நீங்கள் செய்யவேண்டியது இவ்வளவுதான். பாமோலிவ் சோப்பால் உங்கள் முகத்தைக்கழுவுங்கள், அதன் அடர்த்தியான நுரையை உங்கள் சருமத்தின் மேல்வைத்து 60 விநாடிகள் தேயுங்கள், பிறகு அலம்புங்கள். ஒரு நாளைக்கு 3 வேளை வீதம் 14 நாட்கள் இவ்வாறு செய்யுங்கள். கீழ்க்கண்ட சருமமாறுதல்களைக் கவனிப்பீர்கள் :

- புதிய, பிரகாசமுள்ள நிறம்!
- குறைந்த நெய்ப்பு!
- அதிக மிருதுத்தன்மை, வழவழப்பு—உலர்ந்த சருமத்திற்கும்!
- தங்கி நிற்கும் புதிய புஷ்பத்தின் வாசனை.
- நீடித்து உழைப்பது.

**சோப்பு மட்டுமில்லை — ஓர் அழகு சாதனம்!**

# பெரியம்மா பீட்டர்ஸன்

**ரா. விநாயகம்**

சமீபத்தில் பறங்கிப்பேட்டை சேவா மந்திரத் தலைவி மிஸ் ஆன்னி மேரி பீட்டர்ஸன் அம்மையார் காலமான செய்தியைப் பலர் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள். ஆனால் இன்றைய நிலைமையில் அந்த அம்மையாரின் பிரிவு எவ்வளவு பெரிய கஷ்டம் என்பது நம்மில் வெகு சிலருக்குத்தான் தெரியும்.

நம் தாய்நாட்டுக்கு அரும் பணி செய்த தீனபந்து ஆண்ட்ரூஸ் போன்ற உத்தமர்களின் திருக் கூட்டத்தைச் சேர்ந்தவர் "பெரியம்மா." ஆம். ஸ்ரீமதி அன்னி மேரி பீட்டர்ஸன் அம்மையாருடன் தேசப் பணியாற்றிய தொண்டர்களும், அவருடைய கல்விச்சாலையில் பயின்ற மாணவ மாணவிகளும் அன்புக்குப் பாத்திரமான குழந்தைகளும் அவரைப் பெரியம்மா என்றே பெருமதிப்புடனும் பேர் அன்புடனும் அழைத்து வந்தார்கள். அவருடைய கடைசி மூச்சு இருந்தவரை மகாத்மா காந்தியின் அடிச்சுவட்டைப் பின்பற்றியே வாழ்ந்து வந்தார்.

தமது எழுபத்து மூன்றாவது வயதில் உயிர் துறந்த ஸ்ரீமதி பீட்டர்ஸன் பாரத தேசத்தில் நாற்பது ஆண்டுகளுக்கு மேல் இருந்திருக்கிறார். நான் ஒரு தடவை அந்த அம்மையாரை, "தாங்கள் இந்தத் தேசத்துக்கு எப்பொழுது வந்தீர்கள்?" என்று கேட்டேன். அதற்கு, "நீங்கள் இந்தத் தேசத்திற்கு வருவதற்கு முன்பே நான் வந்து விட்டேன்" என்று சிரித்த வண்ணம் பதிலளித்தார். அந்த நிகழ்ச்சியை இப்பொழுது நினைத்தாலும் எனக்குச் சிரிப்பும் மகிழ்ச்சியும் ஏற்படுகிறது.

டென்மார்க் தேசத்தில் 1878-ம் ஆண்டு ஸ்ரீமதி பீட்டர்ஸன் பிறந்தார். சிறு வயதிலிருந்தே இயற்கைக் காட்சிகளிலும் இயேசுநாதரின் அருள் மொழிகளிலும் அவருடைய மனம் பெரிதும் ஈடுபட்டது. வயது ஆக ஆக மேற்கண்ட இவ்விரு விஷயங்களில் அவருடைய ஈடுபாடும் அதிகரித்து அவர் வாழ்க்கை பூராவுமே அந்த அடிப்படையில் அமைந்தது.

1909-ம் ஆண்டு டேனிஷ் மிஷனில் சேர்ந்து, அதன் அங்கத்தினராக இந்தியாவுக்கு வந்தார். வந்ததிலிருந்து சுமார் பத்து வருஷ காலம், கிறிஸ்துவ மதப் பிரசாரத்திலும் ஏழை எளிய பெண்மணிகளின் முன்னேற்றத்துக்கு ஓய்வு ஒழிவின்றிப் பாடுபடுவதிலும் ஈடுபட்டிருந்தார்.

ஆனால் மகாத்மா காந்தி 1920-ம் ஆண்டு நடத்திய ஒத்துழையாமை இயக்கம் அவர் உள்ளத்தில் பெரும் புரட்சியை உண்டுபண்ணி விட்டது. அவர் வாழ்க்கைப் போக்கையே மாற்றி விட்டது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துத் தீவிரமாகப் போராடிய காந்தியடிகளின் ஆத்ம பலத்தைக் கண்ட அம்மையார் காந்தியினுள்ளே தெய்வ சக்தியிருப்பதைக் கண்டார். தாம் மேற்கொண்ட பிரசார வேலைகளையும், ஏகாதிபத்தியத் தொடர்புடன் தாம் இத்தனை நாளும் செய்து வந்த வேலைகளையும் துறந்து விட்டுக் காந்தி வழியில் புகுந்தார். டேனிஷ் மிஷனை விட்டுத் தம் சொந்த முயற்சியில் இயேசுநாதர், காந்தியடிகள் இவர்கள் இருவருடைய அன்பு நெறியைப் பின்பற்றிப் பொதுநல வேலைகளில் ஈடுபட்டார்.

இவ்வேலைகளுக்குப் பணம் தேவையாக இருந்தது. ஆகவே, தமது தாய்நாடான டென்மார்க்குக்குச் சென்று, தாம் எடுத்துள்ள காரியத்தை அங்குள்ள நண்பர்களுக்கு விளக்கி அவர்களுடைய ஆதரவைப் பெற்று வந்தார்.

இந்தியாவுக்கு வந்ததும், குழந்தைகளுக்கும் பெண்களுக்கும் தொண்டு புரியும் ஆசிரமம் ஒன்று பறங்கிப்பேட்டையில் நிர்மாணிக்கத் திட்டமிட்டார். அதன்படி ரயில் சந்தடியும், ரோடு சந்தடியும் அற்ற ஒரு ஒதுப் புறமான வனப் பிரதேசத்தில் ஒரு அழகிய ஆசிரமக் கட்டிடம் நிறுவினார். அந்த ஆசிரமத்துக்குச் சேவா மந்திர் என்று பெயரிட்டார். மகாத்மா காந்திதான் 1921-ல் இந்தக் கட்டிடத்துக்கு அஸ்திவார மிட்டார்.

சுமார் முப்பது வருஷ காலமாகப் பல ஏழைப் பெண் குழந்தைகளைச் சந்தோஷமாகவும் எல்லா வசதிகளுடனும் வளர்த்து வந்தார். குழந்தைகளிடம் அளவிறந்த அன்பு உடையவர் பெரியம்மா. குழந்தைகளின் மகிழ்ச்சி தம் மகிழ்ச்சி என்ற உறுதியான எண்ணத்துடன் கடைசி மூச்சு வரை வாழ்ந்து வந்தார். கஷ்டம் நேர்ந்த காலத்திலும் ஆசிரமத்தில் ஆனந்தம் பொங்கவும் குழந்தைகள் சந்தோஷமாக இருக்கவும் பெருமுயற்சி எடுத்து நடத்திக் காண்பித்தார். தமக்கு அத்தியாவசியமாக இருந்த பல தேவைகளைக் குறைத்துக் கொண்டார். இந்தியப் பாணியில் புடவை உடுத்திக் கொள்ள அவருக்கு



ரொம்பவும் ஆசை: அதுவும் வீட்டில் நெய்த கதராடையில் அதிகப் பிரியம்.

சுதந்திர உணர்ச்சியே அவருடைய வாழ்க்கையின் மூச்சு. அரசாங்கத்திடம் உதவி பெற்றால் அரசாங்கத்தின் கட்டுப்பாடுகளுக்கு உட்பட வேண்டியிருக்கும் என்று பிரிட்டிஷ் அரசாங்கம் இருந்த வரை தமது ஆசிரமத்துக்கு எவ்வித உதவியும் கோரவில்லை. கடைசி வரை அவர் தம் பணியை அரசாங்கம் அங்கீகரிக்க வேண்டும் என்றோ, சர்க்கார் உதவி வேண்டும் என்றோ கருதியவரல்ல. 1948ல் சென்னை ராஜ்ய சர்க்கார் காந்தியடிகளின் ஆதாரக் கல்வித் திட்டத்தை அங்கீகரித்த பின்னர் தான், சேவா மந்திரத்தில் தமது அரசாங்க உதவி பெற்ற ஆதாரக் கல்வி ஆசிரியர் முகாம் நிறுவ ஒப்புக் கொண்டார். அப்பொழுது கூட, சுதந்திர உணர்ச்சியைப் பறிக்கும் அரசாங்கத்தின் சில சட்ட திட்டங்களை எதிர்த்து, சுதந்திரச் சூழ்நிலையில் ஆதாரக் கல்வி நடத்தப் பிரயத்தனப்பட்டார்.

சேவா மந்திரத்திலுள்ள புத்தகங்களும் சித்திரங்களும் அம்மையார் பாரததேசத்து இலக்கியங்களிலும் சங்கீதத்திலும் மற்ற கலைகளிலும் எவ்வளவு ஈடுபாடுள்ளவர் என்பதை எடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கின்றன. அம்மையார் சேவாமந்திரத்திலிருந்து குழந்தைகளுக்குக் கலை சம்பந்தமான பயிற்சி அளிக்க ரவீந்திரநாத் டாகூர் ஆரம்பித்த சாந்தி நிகேதனத்துக்கு அனுப்ப வேண்டும் என்று விரும்புவார்.

காந்தி மகான் 1937-ல் ஆதாரக் கல்வித் திட்டத்தைப் பற்றிக் கூறிய போது, செய்கையில் அதைச் செய்து காட்டத் துணிந்த ஒரு சிலரில் இவர் ஒருவர். பின்னர், இந்த அம்மையாரின் ஆதாரக் கல்வித் திட்டத்துக்குக் கஸ்தூரிபா ஞாபகார்த்த நிதி சில காரணங்களால் உதவ முடியாதிருந்த போது, காந்திஜி தாமே ஓரளவு உதவ முன்வந்தார். அப்படியென்றால் காந்தியடிகளுக்கு இந்த அம்மையாரின் தொண்டுகளில் எவ்வளவு மதிப்பிருந்தது என்று ஊகிக்கலாம் அல்லவா?

1947-ல் பாரத தேசம் சுதந்திரம் பெற்றபோது அம்மையார் டென்மார்க்கிலிருந்தார். இந்தியா சுதந்திரம் அடைந்ததில் வெளிநாட்டாரில் யாரும் ஸ்ரீமதி பீட்டர்ஸனைப் போல் ஆனந்தம் அடைந்திருக்க முடியாது. ஆனால் அந்த ஆனந்தம் அதிக நாள் நீடிக்கவில்லை. அதிகார வர்க்கம் பழைய முறையிலேயே ஆட்சி செலுத்துவதைக் கண்டு அவருடைய உற்சாகம் ஓரளவு குறைந்திருக்க வேண்டும். எனினும், பாரதத் தாயின் மீதும் பாரத நாட்டுக் குழந்தைகளின் மீதும் அவர் கொண்டிருந்த அன்பு கொஞ்சமும் குறையவில்லை.

அவருக்கு ஒரு விருப்பமிருந்து வந்தது. தாம் பாரத நாட்டிலேயே இருக்க வேண்டும், பாரத மக்களுக்குக் கடைசி மூச்சு வரை தொண்டாற்ற வேண்டும் என்று விரும்பினார். கடைசியில், தமது அஸ்தி பாரத மண்ணில் கலந்துவிட வேண்டும் என்றும் அவர் விரும்பினார். அந்த விருப்பம் அவர் இறந்த அடுத்த நாள் ஜனவரி 10-ம் தேதி நிறைவேறியது.

எனக்கும் தேசப்பணியில் ஈடுபட்ட இன்னும் பலருக்கும் மிஸ் பீட்டர்ஸனின் வாழ்க்கை இத்தனை காலமும் தொண்டு வாழ்க்கைக்கு ஒரு தூண்டு கோலாக இருந்தது; ஒரு லக்ஷ்யமாக இருந்தது; ஒரு உதாரணமாக இருந்தது. பாரத தேசவாசிகளுக்கோ அம்மையாரின் வாழ்க்கை ஓர் உண்மையைச் சொல்லிக் கொண்டிருந்தது: "உலக மக்கள் அனைவரும் ஓர் இறைவனின் புதல்வர்கள்; மக்கள் அனைவரும் சகோதரர்கள்" என்ற உணர்ச்சியானது தேசம், மதம் என்ற குறுகிய எல்லைகளையெல்லாம் கடந்தது என்பது தான். இதைவிட நல்ல படிப்பினை யுத்த பீதியும் ஆதிக்க வெறியும் சூழ்ந்த இன்றைய நிலையில் நமக்கு வேறு ஏது?



# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 27. மலச்சிக்கல் நீங்கும்

**ப**யூராசனத்தை எப்படிப் பழகுவது என்பதைத் தெரிந்து கொண்டிருப்பீர்கள். அதைப் பழகுவதால் ஏற்படும் பலனை இப்பொழுது சொல்லுகிறேன்.

நமது உடலில் கைகள், கால்கள், தலை தவிர மீதி பாகத்தை எடுத்துக் கொள்வோம். அதை இரண்டு பாகமாகப் பிரிப்போம். மேல்பாகம் நுரை ஈரல்கள், இரத்தாசயம் ஆகியவைகள் இருக்கும் ஒரு பெட்டி போன்றது. கீழ் பாகம் ஆகாரப்பை, சிறு குடல், பெருங் குடல், கல்லீரல், பித்தப் பை, மூத்திரப் பை மற்றும் ஜனனேந்திரியங்களைக் கொண்டது.

மலச் சிக்கல் ஏற்படுவதெல்லாம் நமது பெருங் குடலில்தான். நாம் சாப்பிடும் ஆகாரம் ஆகாரப் பைக்குச் சென்று, பிறகு சிறு குடலுக்குச் செல்லுகிறது. அங்கு இரத்தத்திற்கு வேண்டிய சத்து கிரகிக்கப்பட்டு, வேண்டாத சக்கையை, மலத்தைப் பெருங் குடலுக்கு அனுப்புகிறது.

சிறு குடல் வயிற்றின் நடுவில் சுருட்டிச் சுருட்டி வைத்தாற் போல் இருக்கும். அதன் பின் தொடங்கும் பெருங் குடல் அதைச் சுற்றி வட்டமாக வருகிறது. இவை சேரும் இடம் வலது பக்கம் கீழ் பாகத்தில். அந்த வட்டத்தை மூன்று பாகமாகப் பிரித்திருக்கிறார்கள். ஏறும் குடல், குறுக்குக் குடல், இறங்கும் குடல் என்று சொல்லுவர். இந்த பாகங்களை யெல்லாம் மலமானது கடந்து, இறங்கும் குடலின் கடைசியில், 'ரெக்டம்' எனும் மலத் துவாரத்தை அடையும்போது, மலம் போக வேண்டிய உணர்ச்சி உண்டாகிறது.

மலச் சிக்கலானது குடலின் எந்த பாகத்திலும் ஏற்படலாம். சாதாரணமாய் ஆரம்பத்தில் இறங்கும் குடலில்தான் ஏற்படும். நாள்பட நாள்பட மலச்சிக்கல் குறுக்குக் குடலுக்கும், பிறகு ஏறும் குடலுக்கும் பரவ ஆரம்பிக்கும்.

மலச் சிக்கலானது சாதாரணமாய் நாம் சாப்பிடும் ஆகாரக் கோளாறினாலும், வேளை தவறிச் சாப்பிடுவதினாலும், வேளா வேளைக்குச் சரிவர ஒழுங்காய் மலஜலம் கழிக்காததினாலும் உண்டாகிறது.

குடலின் இயற்கைக் குணம், நாம் சாப்பிடும் வஸ்துக்களின் சத்தை கிரகிப்பது. அதன் சுவரிலுள்ள மிகச் சிறிய துவாரத்தின் மூலமாக அதன் ரஸத்தை இழுத்து ரத்தத்துடன் கலக்கும். நாம் வேளா வேளைக்குச் சரிவர மலம் கழிக்காமல் அடக்குவோமானால் மலம் இறுகி விடும் அதனால் மலச்சிக்கல் ஏற்பட்டு விடும்.

நாம் சாப்பிடும் ஆகாரத்தில் சக்கைப்பொருள்கள் சேர்ந்தால்தான் மலச் சிக்கல் இல்லாமல் இருக்கும். கோதுமை மாவைச் சலித்துத் தவிடு எடுப்பது, அரிசியைக் குத்தித் தவிட்டை எடுப்பது மாவு வஸ்துக்களை அதிகம் சேர்ப்பது, காரம், புளி, கடுகு போன்றவைகளை அதிகம் சேர்ப்பது, வறுவல், எண்ணெயில் பொறித்த சாமான்களை அதிகம் உண்பது, ஊறுகாய் தினுசுகள், பெருங்காயத்தைப் போட்டு எல்லாவற்றிலும் நன்றாய்த் தீட்டி உண்பது போன்றவைகளால் மலம் தாராளமாய் இறங்காது, கட்டியாய் விடும். அதனாலும் மலச்சிக்கல் ஏற்படலாம்.

வேளா வேளைக்குச் சாப்பிடாமல் கண்ட நேரத்தில் கண்டபடி கிடைத்ததை எல்லாம் சாப்பிடுகிறவர்களுக்குக் குடல் அதிக வேலை செய்ய வேண்டி வரும். அப்படிச் செய்து கொண்டே வந்தால், சில நாட்களில் அது சக்தி இழந்து விடும். மலத்தை நகர்த்தித் தள்ளக் குடலுக்குச் சக்தியிருக்காது. மலம் ஆங்காங்கு அப்படியே தங்கி விடும். ஆனால் குடல் சுவரிலுள்ள வாய்கள் வெறுமனே இருப்பதில்லை. மலத்திலுள்ள அசுத்த நீரை அப்படியே இழுத்து விடும். அப்பொழுது மலம் வெளியில் வர முடியாமல் அங்கங்கேயே இறுகித் தடைப்பட்டுப் போகும்.

அதிக ஆகாரம் உண்பவர்களின் குடல்கள் அதிக வேலை செய்யச் சக்தியில்லாமையாலும், சத்தைக் கிரகிக்க முடியாமையாலும் அப்படியே ஆகாரப் பொருள்களை வெளியில் தள்ளி விடும். அதனால் அஜீரண பேதி ஏற்பட்டு விடுகிறது.

பெருங்குடலுக்குத் தள்ளப் படுவதெல்லாம் வேண்டாத கழிவுப் பதார்த்தங்கள். அங்கு மலச்சிக்கல் நாள் கணக்கில் ஏற்பட்டால் என்ன ஆகும்! மலத்திலுள்ள விஷங்களையும், வேண்டாத ரசங்களையும் குடல் கிரகித்து ரத்தத்துடன் சேர்ப்ப

நால் ரத்தம் கெட்டுப் போய், கலபமாய் எந்த விதவியாதியும் வரக் காரணமாய் விடுகிறது. சருமத்தின் தேஜஸ் மாய்ந்து விடும். சுருக்கங்கள் விழும். வறண்ட சருமம் ஏற்படும். மற்றும் சொறி, சிரங்குகள் ஏற்படும். தலைவலி, சோம்பல், பலஹீனம், மயக்கம், இருதயப் படபடப்பு மற்றும் எல்லா நோய்க்கும் வித்தாக அமைகிறது. பொதுவில் ரத்தம் கெடுவதால் எது வேணுமானாலும் உண்டாகலாம்.



இவ்வாண்டு சென்னைப் பல்கலைக் கழகம் நடத்திய தமிழ்ப் பேச்சுப் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்ற ஸ்ரீ டி. எம். காளியப்பா. இவர் கோவை கவர்ன்மெண்ட் ஆர்ட்ஸ் காலேஜ் பி. ஏ., வகுப்பு மாணவர்.

சிலருக்குப் பெருங்குடலில், அநேகவித பூச்சிகள், புழுக்கள் பெருகிப் பல்கி அங்கேயே குடும்பத்துடன் சுகஜீவனம் செய்யும். மனிதனுக்குக் கிடைக்க வேண்டிய சத்தையெல்லாம் அவைகள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும். அதனால் என்ன சாப்பிட்டாலும் ஆள் எலும்புந் தோலுமாய்த் தானிருப்பான்.

கடினமான மலச்சிக்கலை மருந்துகளினாலும் போக்க முடியவில்லையானால் தற்போதைய வைத்திய முறைப்படி அதிகம் கெட்டு விட்ட பெருங்குடலை வெட்டியே எடுத்து விடுகின்றனர். வேலைக்கே லாயக்கில்லாமல் கெட்டுப்போன குடலை வைத்துக் கொண்டு கஷ்டப்படுவதை விட எடுத்து விடுவது மேல்தான்.

ஆனால் ஆரம்பத்திலேயே கவனித்து மயூராசனத்தைக் கைக்கொண்டு ஒழுங்கான ஆகார முறைகளை நியமித்துக் கொண்டால் இக் கஷ்டங்களுக் கெல்லாம் ஆளாக வேண்டியதில்லையல்லவா? எத்தனை உப்புகள்! எத்தனை மாத்திரைகள்! எத்தனை லேகியங்கள்! படுக்கும்போது மருந்து அருந்தினால்தான் மறுநாள் காலையில் வெளிக்குப் போக முடியும். அல்லது காலையில் ஏதாவது அருந்தினால்தான் நிவர்த்தியுண்டு. சிலர் சுருட்டு, பீடி, சிகரெட் பிடிப்பார்கள். சிலருக்கு 'எனிமா' எடுத்துக் கொண்டால்தான் முடியும். வாரந்தோறும் பேதிக்கு எடுத்துக் கொண்டால்தான் முடியும். வாரந்தோறும் பேதிக்கு எடுத்துக் கொள்பவர் அநேகர். இம்மாதிரி குடலை மருந்தெனும் அங்குசத்தினால் சதா குத்திக் குத்தி வேலை வாங்குகின்றனர்.

இவைகளெல்லாம் இல்லாமல் இருக்க வேண்டுமானால் மயூராசனம்தான் ஏற்ற வழி. மற்ற ஆசனங்களைப் பழகும்போது கூட மலச் சிக்கல் விலகும். ஆனால் மயூராசனத்தில் அதற்குப் பிரத்தியேகப் பயிற்சி அளிக்கப்படுகிறது.

மயூராசனத்தில் ஏறும் குடலும், இறங்கும் குடலும் இரண்டு முழங்கைகளால் சரீர பளுவைத் தாங்கி அழுத்த, அந்த இடங்களிலுள்ள மலங்கள் பிதுக்கித் தள்ளப்படுகின்றன. ஒரு கையினால் செய்யும் மயூராசனத்தில் குறுக்குக் குடலிலுள்ள அழுக்குகளை இடம் விட்டுப் பெயரச் செய்கிறது. பிறகு ஏது மலச்சிக்கல்? இது மட்டுமல்ல. மற்றும் வயிற்றிலுள்ள உறுப்புக்களெல்லாம் அழுத்தப்படுவதால் அவைகள் சுறுசுறுப்பெய்தி அதனதன் காரியங்களைச் செவ்வனே செய்யும். வயிற்றுக் கொழுப்பைக் கரைத்து ரத்த விருத்தியை உண்டாக்கும். மஞ்சள் காமாலை, மலச் சிக்கல், அஜீரணம், மூல வியாதி, நீரழிவு அதாவது 'டயபட்டீஸ்,' சோம்பல் முதலிய நோய்கள் போகும். (தொடரும்)



“உன் கடுதாசியை அப்புறம் போடலாம்! முதலில் என் கடுதாசியைப் போட்டு விடுகிறேன்! சீக்கிரமாகக் கடிதம் ஊர்போய்ச் சேரவேணும்.”


நீங்கள் உங்கள் பற்களை
இன்று மக்ளீன் செய்தீர்களா?
"உங்கள் பெராக்ஸைட் பற்
பசையை ஒரு மாதத்திற்கு
முன் நான் உபயோகிக்கத்
தொடங்கினேன். அது ரொ
ம்ப நன்றாயிருப்பதை அறி
ந்தேன். என் பற்கள் விகா
ரமாகக் கறைபடிந்திரு
ந்தன; ஆனால் உங்கள்
பற்பசையை உபயோகி
ப்பது முதல் அவை வெ
ள்ளை வெளேரென்றாகி
விட்டன."
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது.
ஈறுகளைப் பாதுகாக்கிறது.
மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
வெண்மை
தருகிறது.
உங்களுக்கு சிறந்ததோர் பற் பசை வேண்டுமானால், மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை உபயோகியுங்கள். மக்ளீன்ஸ் ஒன்றில்தான் பற்களை வெண்மையாக்கக் கூடிய பெராக்ஸைட் இருக்கிறது. இதன் பிரத்யேகமான தயாரிப்பு முறையினால் பல் கெடுவதைத் தடுக்க உதவுகிறது. வாயில் ஊறும் நீரை மிதப்படுத்தி, கறைகளைப் போக்கி, பற்களைப் பளபளப்பாகவும் வெளுப்பாகவும் ஆக்கி, சுவாசத்திற்கு பெப்பர்மெண்டின் நறுமணத்தைத் தருகிறது.
இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்!
MACLEANS
PEROXIDE
TOOTH PASTE

# அடிமை ரோஷனாரா

ஏ. எஸ். ராகவன்

இரவின் மௌனமான விநாடிகள் நத்தை போல மெல்ல ஊர்ந்து கொண்டிருந்தன. வெளியில் பகலைப் பழிக்கும் நிலவு பொழிந்து கொண்டிருந்தது. கூடாரத்திற்குள் படுத்திருந்த ருஸ்தமுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான். இந்த நிலை அவனுக்குப் புதிதல்ல. அவன் மனம் நிலை குலைந்து ஆறு மாதங்களுக்கு மேலாகி விட்டன.

அடுத்த கட்டிலில் அவன் நண்பன் அஹமத் படுத்திருந்தான். கவலையற்றுத் தூங்கும் அவன் முகத்தைப் பார்த்ததும் ருஸ்தமுக்குச் சிரிப்பு வந்தது. மனிதர்களுக்குள்தான் எவ்வளவு வேறுபாடு! இருவரும் ஒரே லட்சியத்தை எதிர் நோக்கிச் செல்பவர்கள், கல்லும் முள்ளும் நிறைந்த நெரடான பாதையில். ஆனால் ஒருவன் நிம்மதியாய் உறங்குகிறான். மற்றவனோ எப்பொழுதோ பறி போய் விட்ட தன் உள்ளத்தை நினைத்துத் தூக்கமின்றித் தவித்துக் கொண்டிருக்கிறான்!

ருஸ்தம் வெளியே வந்தான். நிலவின் குளுமையும், இரவின் புரிபடாத சலனையும் அவனிடம் மயக்கத்தைக் கிளறி விட்டன.

வழ வழப்பாக இருந்த பாறை மீது உட்கார்ந்து கொண்டதும் அவன் மனம் உல்லாசமாகப் புறப்பட்டு எங்கோ சென்றது.

*                *                *

பீஜபூரின் பிரதான வீதியில் அஹமதும் ருஸ்தமும் தோள் மேல் தோள் போட்டபடி நடந்து கொண்டிருந்தார்கள். இருவரும் கட்டுமஸ்தான அழகிய இளைஞர்கள். அது மட்டுமா? சுல்தானின் அத்தியந்த பிரேமையை அடைந்து, குறுகிய காலத்தில் சேனையில் தலைமைப் பதவியை வகிக்கும் பாக்கியம் பெற்றவர்கள். தூரத்திலிருந்து பார்த்தால் இருவரும் அண்ணன், தம்பியைப் போலத் தோன்றுவார்கள். ஆனால் உண்மையிலோ இருவர் குலமும் ரத்தமும் வேறு. ஒருவன் அரச குலத்தவன், மற்றவன் அவனுடைய ஆருயிர் நண்பன்.

அன்று அடிமைப் பெண் ரோஷனாராவின் நாட்டிய அரங்கேற்றம். இதற்குமுன் அரண்மனையின் அந்தப்புரத்தில் மட்டும் 'ஜல், ஜல்' என்று ஆடிவந்த சிறுமி ரோஷனாரா இப்போது உலக அரங்கில் ஆடப்போகிறாள். அவளும் தன் குழந்தைப் பருவத்திலிருந்து தாண்டி மெல்ல உலக அநுபவத்தில் புக வேண்டியவள்தானே!

சுல்தான் கம்பீரமாக அமர்ந்திருந்தார். முதுமையில் சுருங்கிய அவருடைய முகத்தில் கடுமைதான் கனல் வீசிக் கொண்டிருந்தது. ஒரு பெரிய ராஜ்யத்தைக் கட்டி ஆள அந்தக் குணம்தான் பிரதானமானது என்று அவர் கருதினாரோ என்னவோ!

நாட்டியம் ஆரம்பமாகியது. ருஸ்தமும், அஹமதும் அரங்கிற்கு வெகு அருகில் அமர்ந்திருந்தனர். ருஸ்தம் ஆச்சரியத்தால் நிலை குலைந்து போனான். ஒரு அடிமைப் பெண் இவ்வளவு அழகாக இருப்பாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. பருவத்தின் பூரிப்பில் தவழ்ந்து கொண்டிருந்த அவளுடைய நாட்டியம் அவனை அமர உலகுக்கே இழுத்துச் சென்றது. அங்கு அவனும் அவளுடன் கைகோர்த்து நடனமாடினான். அவன் உள்ளம் உல்லாசத்தாலும் பிரமையாலும் பொங்கி வழிந்து கொண்டிருந்தது.

"நாட்டியம் அற்புதம் ...... ரோஷனாரா, இதோ இந்தச் சிறு வெகுமதியை ஏற்றுக் கொள்!" என்று கூறிச் சுல்தான் முத்து மாலையைப் பரிசாக வழங்கியதும் சபையில் எழுந்த கரகோஷம் வானைப் பிளந்தது.

ருஸ்தமின் பிரமையை அஹமத் கூடக் கவனித்தான். ரோஷனாராவின் நாட்டியம் அவனைக்கூடக் கலக்கி விட்டது! அவன் கண்களில் கண்ணீர்த் துளித்தது. பழைய நினைவுகள் வந்து மோதின போலும்!

அன்று மகாவீரன் ருஸ்தம் தன் மெல்லிய இருதயத்தை அடிமைப் பெண்ணிடம் பறி கொடுத்துவிட்டுத் திரும்பினான். இதை அஹமதும் அறிந்திருந்தான். ஆனால் அவன் இதைப் பற்றி ஏதும் பேசவில்லை.

பெருமூச்சு விட்டபடி எழுந்தான் ருஸ்தம். இப்போது நிலவு மெல்ல மறைந்து கொண்டிருந்தது. கூடாரத்திற்குள் வந்து படுக்கையில் விழுந்ததும் ருஸ்தமுக்குத் தன்னை அறியாமல் தூக்கம் வந்துவிட்டது.

சிறிது நேரம் ஆயிற்று. ருஸ்தமின் கண்கள் இறுக மூடிக் கொண்டன. அப்போது ஏதோ சத்தம் கேட்டது. ருஸ்தம் திடுக்கிட்டு விழித்துப் பார்த்தான். அவனுடைய நண்பன் அஹமத் படுக்கையை

விட்டு எழுந்திருப்பதையும், தன்னை ஒரு முறை கூர்மையாகப் பார்த்து விட்டுக் கூடாரத்தை விட்டுச் சந்தடி செய்யாமல் அவன் வெளியே செல்வதையும் கவனித்தான் ருஸ்தம். அவன் எங்கே போகிறான் என்று புரியவில்லை. எழுந்திருந்து வெளியே வந்தான். பால் போன்ற நிலவொளியில் அழகிய அஹமதின் உருவம் வெகு தூரத்துக்கப்பால் கண்ணிலிருந்து மறையும் வரை பார்த்துக் கொண்டேயிருந்தான்.

கனவு போலத் தோன்றியது அவனுக்கு. அஹமத் இது வரை இப்படி நள்ளிரவில் வெளிப்பட்டதே கிடையாது. ஒரு வேளை அவனும் தன்னைப் போல, காதல் வலையில் சிக்கிக் கொண்டு உழல்கிறானோ என்று எண்ணினான். அதை நினைத்ததும் அவனுக்குச் சிரிப்பு வந்தது. "பொல்லாத காதல்!" என்று வாய்க்குள் முணங்கியபடியே வந்து படுக்கையில் மெதுவாகச் சாய்ந்தான்.

விடியற்காலம் நல்ல பனி; உடலெல்லாம் பனிப் படலத்தால் மூடியிருக்க அஹமத் கூடாரத்துக்குத் திரும்பி வந்தான். அப்போதுதான் ருஸ்தம் கெட்ட கனவு ஒன்று கண்டு எழுந்து உட்கார்ந்தான். கனவில் அவன் ரோஷனாராவுடன் ஆனந்தமாக வான வீதியில் பவனி வரும்பொழுது திடீரென்று அவன்மீது கத்தி பாய்ந்தது. அதை அடுத்து, 'கல, கல' வென்று சிரிப்பொலியும் கேட்டது. பயந்துபோய் ருஸ்தம் சிரிப்பு வந்த திசையை நோக்கினான். அங்கு சுல்தான் தன் வளைந்த மீசையை முறுக்கியபடி கம்பீரமாக நின்று கொண்டிருந்தார்!

அடேயப்பா! என்ன கோரமான கனவு!

அஹமத் அப்பொழுதுதான் உள்ளே நுழைந்தான். அவனைப் பார்த்ததும் ருஸ்தம் பரபரப்புடன், "அஹமத்......! எங்கே போய் விட்டு வருகிறாய்? உடம்பெல்லாம் பனியில் நனைந்து சில்லென்றிருக்கிறதே!" என்று கேட்டான்.

அஹமத் இந்தக் கேள்வியை எதிர் பார்க்கவில்லை போலும்! ஆதலால் சிறிது நேரம் பதில் பேச முடியாது நின்றான். "எங்கேயும் இல்லை. ருஸ்தம்..... கொஞ்ச தூரம் வெளியே போய்விட்டு வந்தேன்" என்றான்.

ருஸ்தம் அதற்கு மேல் ஒன்றும் கேட்கவில்லை. தன் நண்பனும் எதையோ மனதில் வைத்துக் கொண்டு மறைக்கிறான் என்பதை மட்டும் அவனால் உணர முடிந்தது.

இரண்டு நாட்கள் கடந்தன. ருஸ்தம் இந்த இரண்டு நாட்களிலும் அஹமத் இரவில் கூடாரத்தை விட்டு வெளிக் கிளம்பி எங்கேயோ போய்விட்டு வருவதைக் கவனித்தான். அவன் எங்கே போகிறான், யாரைப் பார்க்கப் போகிறான் என்பதை அறிந்து கொள்ள அவனுக்கு ஆவல் உண்டாயிற்று. அஹமத் அவனிடம் எதையும் கூறவும் இல்லை. ஆகவே அதை ரகசியமாகவே அறிந்துவிடுவது என்று தீர்மானித்தான்.

அன்று இரவு அஹமத் சொல்லி வைத்தாற் போல நள்ளிரவில் படுக்கையை விட்டு எழுந்திருந்தான். பிறகு மெல்ல ஏதோ முணுமுணுத்தான். அதன் பிறகு அவனுடைய வழக்கமான நடையை விடத் துரிதமாக அவன் நடந்து வெளியே சென்றான்.

இதை யெல்லாம் கவனித்த ருஸ்தம் உடனே படுக்கையை விட்டு எழுந்தான். அஹமதின் விசித்திர நடவடிக்கைகள் அவனுக்குப் புரியவில்லை. துரிதமாக அவனும் நண்பனைப் பின் தொடர ஆரம்பித்தான்.

குறுகிய பாதைகள், சந்துகள் வழியாக வெல்லாம் நடந்து கடைசியில் நகரின் எல்லையிலிருந்த ஒரு சிறு குடிசையின் முன் வந்து நின்றான் அஹமத். அந்த இடம் மிக அசுத்தமாக இருந்தது. குடிசையின் வெளியே சில உடைந்த கரியேறிய மண்



பானைகள் அவ் வீட்டின் ஏழ்மையைப் பிர கடனம் செய்து கொண்டிருந்தன.

குடிசைக்குள்ளிருந்து 'லொக், லொக்' என்ற இருமல் சத்தம் அடிக்கடி கேட்டது. ஏதோ ஒரு ஆத்மா இவ்வுலகிலிருந்து விடை பெற்றுக் கொள்ளத் துடிக்கும் ஒலியாக ருஸ்தமுக்கு அந்த இருமல் பட்டது.

கதவை லேசாகத் தட்டினான் அஹமத். அடுத்த வினாடி அது திறந்து கொண்டது. உள்ளேயிருந்து அழகிய பெண்ணின் முகம் வெளிப்பட்டது. நிலவின் ஒளியில், மங்கிய அந்த முகத்தின் அழகை நன்றாகப் பார்த்தான் ருஸ்தம். அடுத்த கணம் அவன் கண்கள் சுழன்றன. அவன் நிலை தடுமாறியது. உலகமே சுழன்றது அவன் முன். ஆம்; அந்தப் பெண் வேறு யாருமில்லை. சாட்சாத் ரோஷனாராதான்!

அஹமத் குடிசைக்குள் நுழைந்தான். கதவு திறந்திருந்தது. உள்ளே உயிருக்கு மன்றாடிக் கொண்டு ஒரு சிறு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அதன் வெளிச்சத்தில் கட்டிலில் படுத்திருந்த ஒரு கிழட்டு உருவத்தைப் பார்த்தான் ருஸ்தம்.



படுக்கையருகில் உட்கார்ந்து அஹமத் அவருடன் என்னமோ பேசினான். கிழவன் சிரிக்க முயன்றான். முடியவில்லை. அடிக்கடி 'லொக் லொக்' என்று இருமியபடியே அருகிலிருந்த ஒரு சிறு பேழையை எடுத்து அஹமதிடம் கொடுத்தான். அவசரமாக அதைத் திறந்து பார்த்த அஹமத் அடுத்த கணம் ரோஷனாராவை வாரி அணைத்துக் கொண்டான்.

சிறிது நேரம் கழித்து அஹமத் வெளியே வந்தான். அதைக் கவனித்த ருஸ்தமும் மள, மள வென்று புறப்பட்டு விட்டான்.

சற்று தூரம் சென்று அவன் திரும்பிப் பார்த்தபோது குடிசையின் முன் ரோஷனாராவும், அஹமதும் நின்று ஆர்வத்துடன் சம்பாஷித்துக் கொண்டிருப்பதைக் கண்டான்.

* * *

ருஸ்தம் ஜீவனற்றிருந்தான். ஆனால் அஹமதோ இப்பொழுதெல்லாம் ரொம்பவும் குதூகலமாக இருந்தான்.

அவனுடைய நிலையைக் கண்டு ருஸ்தம் தவித்தான். ஆறு மாதங்களாக அவன் உள்ளத்திலே முளைத்து, வளர்ந்து பெரிய மரமாகி விட்ட காதல் விதை இப்போது திடீரென்று பிடுங்கி எறியப் பட்டு விட்டது. அந்தக் கொடூர காரியத்தைச் செய்தது வேறு யாருமில்லை. அவனுடைய பிரிய நண்பன் அஹமத்! யாருக்காக அவன் விலைமதிப் பற்ற தன் உயிரையும் தியாகம் செய்ய முன் வந்தானோ, அதே அஹமத்!

அஹமதும், ருஸ்தமும் இணைபிரியாத சிநேகிதர்களாக மட்டும் இருக்கவில்லை. இரு வருடைய உணர்வும், சொல்லும் ஒன்றாயிருந் தது. இதுவரை இருவரிடையே எந்த விஷயத்திலும் அபிப்பிராய பேதம் ஏற்படவில்லை. ஆனால் இப்பொழுதோ?......

இந்த எண்ணம் எழுந்ததும் ருஸ்தம் தன்னைத்தானே நொந்து கொண்டான். எதற்காகத் தங்களிடையே அபிப்பிராய பேதம் எழவேண்டும்? அப்படி ஏற்பட ஒரு போதும் அவன் விட மாட்டான். அதை விட உயிரையே விட்டு விடுவான்.

அஹமத் காலஞ்சென்ற ஷேர்ஷாவின் மகன். உலகத்தில் மிகவும் சாதுவாகவும், நல்லவராகவும், மதப்பற்றுள்ளவராகவும் இருப்பவர்கள் அடையும் கேட்டைத்தான் ஷேர்ஷாவும் அடைந்தார். அவருடைய படைத்தலைவனான இப்ராஹிம்கான் வஞ்சனையால் ஷேர்ஷாவைக் கொன்று விட்டான். ஷேர்ஷாவின் இரண்டு குழந்தைகள்,—ஒன்று ஆண், மற்றொன்று பெண்—ரகசியமாக

வெளியேற்றப்பட்டு விட்டனர். மேலும் அந்தச் சக்தி வோகனைப் பற்றிக் கவலைப்படவில்லை இப்ராஹீம்கான். அவன் ஆட்சி ஸ்திரமாகி விட்டது இப்போது.

அஹமத்தை வளர்த்து வந்த தனவந்தர் பருவம் வந்த பிறகு அவனுக்குக் குடிப் பிறப்பை விளக்கினர். அதன் பிறகே அஹமத் தன் உயிர் நண்பன் ருஸ்தமுடன் பீஜபூர் வந்து சுல்தானின் சேனையில் சேர்ந்து உயர்ந்த பதவியை அடைந்தது. அந்தக் கடினமான காரியத்திற்கு இதுவரை கடமை தவறாமல் ஓயாது உழைத்தவன்தான் ருஸ்தம்.

தன் நண்பனின் உயர்ந்த லட்சியம், காதல் இரண்டும் கனவாகிவிடக் கூடாதே என்று கவலை ஏற்பட்டது ருஸ்தமுக்கு. அதற்கு இடையூறாக இருக்கக் கூடாதென்று தீர்மானித்தான் அவன். ஆம், அவன் ரோஷனாராவின் மீது கொண்ட காதலைத் தன் நண்பனுக்காகத் தியாகம் செய்து விடத் தீர்மானித்து விட்டான்.

* * *

“ருஸ்தம்!” என்று அழைத்தபடி அருகில் வந்து அமர்ந்தான் அஹமத். கத்தியைத் தீட்டிக் கொண்டிருந்த ருஸ்தம் அவனை ஏறிட்டுப் பார்த்தான். இருவரும் மனம் விட்டுப் பேசி ஒரு வாரம் ஆகி விட்டது. அஹமத் அந்த ஒரு வாரத்தில் வெகு மும்முரமாக எங்கெல்லாமோ போய் வந்து கொண்டிருந்தான்.

அஹமத் புன்முறுவலுடன் பேச ஆரம்பித்தான். “என் லட்சியம் ஈடேறும் நாள் வந்து விட்டது. என் தந்தை ஆண்டு வந்த இந்த ராஜ்யத்தைச் சீக்கிரம் அடைய வேண்டும். நாட்டில் இந்தச் சுல்தானுக்கு ஆதரவில்லை. படையும் நம் பக்கமே. நீ என்ன சொல்கிறாய்?” என்று கேட்டான்.

ருஸ்தமின் கண்கள் பிரகாசத்தால் மின்னின. “ஆம், அஹமத்! இதுவே சரியான சமயம். என் உயிரை இந்த மேன்மையான லட்சியத்துக்குத் தியாகம் செய்ய நான் தயாராக இருக்கிறேன்” என்றான்.

அஹமத் அவனை அன்புடன் அணைத்துக் கொண்டு, “ருஸ்தம், நீயே என் பிராண சினேகிதன். இந்த ராஜ்யம் உனது. நீ உத்தரவிட்டதைச் செய்ய நான் தயாராயிருக்கிறேன். அது மட்டுமா, விலை மதிக்க முடியாத மாணிக்கம் ஒன்றை உனக்குப் பரிசளிக்கப் போகிறேன்” என்று கூறினான்.

“மாணிக்கமா?...என்னுடைய மனமே வைரம் பாய்ந்ததாயிற்றே, அஹமத்!...... அதற்கு மாணிக்கம் வேறா?” என்று ருஸ்தம் மிகவும் அசுவாரஸ்யமாகக் கேட்டான்.

“அப்படிச் சொல்லாதே ருஸ்தம்! கிடைத்தற்கரிய அந்த ரத்தினத்தை நீ எப்படி அனுபவிக்கப் போகிறாய் என்று பார்” என்று கூறிவிட்டுச் சென்றான் அஹமத்.

சுல்தான் அடிமை ரோஷனாரா மீது தன் உள்ளத்தைப் பறிகொடுத்து விட்டுத் தவித்துக் கொண்டிருந்தார். இது அவருக்குப் புதிதான விஷயம் அல்ல. அவருடைய பொல்லாத இருதயம் இது வரை எவ்வளவோ முறை பறிபோய்த் திரும்பி அவரிடமே வந்திருக்கிறது. அவருடைய விசாலமான அந்தப்புரத்தை அலங்கரிக்கும் பேகம்களே அதற்குச் சாட்சி.

முன்பெல்லாம் தன் மனைவிகளை வைரக் கற்களென்று எண்ணி வந்த சுல்தான் இப்போது அவர்களை வெறும் ‘மின்னும் கற்கள்’ என்று எண்ணினார். ரோஷனாரா என்ற வைரத்தை இக்கற்களுக்கிடையே வைத்து அழகு பார்க்கத் தீர்மானித்தார்.

இச்செய்தி ரோஷனாரா மூலம் அஹமதுக்கு எட்டியது. அன்று இரவு பளிங்கு மண்டபத்திற்கு அடிமை வரும்படி உத்தரவு. பாவம்! ரோஷனாரா என்ற தாழம்பூவின் மணத்தைக் கண்டு பறிபோன சுல்தானின் கண்களுக்கு அதைக் காத்து வரும் நாக சர்ப்பத்தைப் பார்க்க முடியவில்லை.

அஹமத் அன்று இரவு புறப்பட்டான். ருஸ்தமிடம் எல்லாவற்றையும் கூறினான். சுல்தானை ஒழித்து விட்டு வந்து விடுவதாகவும், வந்தவுடன் ஒரு ரஸமான செய்தி ஒன்று கூறுவதாகவும் கூறிச் சென்றான்.

ருஸ்தமுக்கு நிலை கொள்ள வில்லை. ரோஷனாராவைச் சுல்தான் அடைய முயல்கிறாரா? சே! என்ன அக்கிரமம்!

ருஸ்தம் வெறுப்புடன் எழுந்திருந்தான். கால்கள் அவனை எங்கோ இழுத்தன. அவன் போய்க் கொண்டே இருந்தான்.

* * *

ரோஷனாரா பளிங்கு மேடையில் இரவில் குவிந்திருக்கும் தாமரையைப் போலத் தலை குனிந்திருந்தாள். சுற்றிலும் பயங்கர அமைதி நிலவியிருந்தது! தூபத்திலிருந்து எழும்பும் வாசனைப் புகை அருவருப்பை அளித்துக் கொண்டிருந்தது அவளுக்கு.

“ரோஷனாரா!” என்ற குரல் கேட்டதும்தான் அவள் தலை நிமிர்ந்தாள். எதிரே சுல்தான் நின்று கொண்டிருந்தார். அவருடைய உடலைப் பொன்னும், மணியும் அலங்கரித்துக் கொண்டிருந்தன. அவருடைய கண்கள் வெறியால் சிவப்பேறி இருந்தன.

“ஏன் பயப்படுகிறாய்? வா, நிலவில் உலாவுவோம்” என்றார் அன்பொழுக.



"எல்லாச் சாமானையும் நீங்களே எடுத்துக் கொண்டு விட்டீர்களே! என்னிடம் ஏதேனும் கொடுங்கள்..."

"வேண்டாம்......நாம் சாப்பிட்ட இந்த இரண்டரை ரூபாய் 'பில்'லை மாத்திரம் நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள்! அது போதும்!"

ரோஷனாரா எழுந்திருந்தாள். மஞ்சள் நிறமான அவளுடைய பாதத்தைக் கண்டு மயங்கி நின்றார் சுல்தான்.

இருவரும் பளிங்கு மண்டபத்தை விட்டு வெளியே வந்தனர். சுல்தானுக்கு ஆனந்த வெறி. அழகி ஒருத்தியை அவன் அடிமையாயிருக்கப்போதிலும், அடைந்து விட்ட பெருமையில் துள்ளிக் கொண்டிருந்தார்.

அப்போது திடீரென்று அஹமத் அங்கே பாய்ந்தான். அந்தப் புலியைக் கண்டு நடுங்கி விட்டார் சுல்தான். "யார்?......நீயா அஹமத்?" என்று கேட்டார்.

அஹமத் உரக்கச் சிரித்தான். "நான் தான். நானே தான். நான் யார் தெரியுமா? இதோ பார்!" என்று கூறி விட்டுத் தன் மார்பில் புரளும் பதக்கத்தைக் காட்டினான். சுல்தான் விழித்தபடி பார்த்தார். ஆ! அது ஷெர்ஷாவின் ராஜ முத்திரை அல்லவா? அந்தக் கிழட்டு விருக்ஷத்திலிருந்து தெறித்த சின்ன விதையா இப்பொழுது இவ்வளவு பெரிய மாமரமாக வளர்ந்து விட்டது?

"உன் முடிவை எதிர்த்துக் கொள். என் கையால் சாவதும் உனக்குப் பெருமை தான்" என்று கம்பீரமாகக் கூறிக் கொண்டே அஹமத் தன் வாளை உருவினான். அதே கணம் சுல்தானும் வாளை உருவி விட்டார்.

ரோஷனாரா நடுங்கினாள். அஹமத் சமயத்தில் வந்து சேர்ந்ததில் அவளுக்கு சந்தோஷம் தான் என்றாலும் அவனுக்கு ஆபத்து நேராதிருக்க வேண்டுமே என்று நடுங்கினாள்.

இருவருடைய வாள்களும் பாய்ந்தன. அஹமத் வீசிய வாள் சுல்தானின் மார்பில் பாய்ந்தது. சுல்தான் வீசிய வாளோ திடீரென்று அங்கு பாய்ந்த வேறொரு உருவத்தின் மீது பாய்ந்து விட்டது.

அஹமத் திடுக்கிட்டான். குனிந்து அந்த உருவத்தைப் பார்த்தான். அதன் வலது புறத்தில் பலத்த காயம்பட்டு ரத்தம் பெருகிக் கொண்டிருந்தது. அதன் முகத்தைப் பார்த்ததும், "ஆ! ருஸ்தம், நீயா? நீ ஏன் வந்தாய்? அகப்பட்டு விட்டாயே!" என்று கதறினான் அஹமத்.

ருஸ்தம் மெல்லக் கண் விழித்தான். "அஹமத், என் ஆசை நிறைவேறிவிட்டது. உனக்காக என் உயிரைத் தியாகம் செய்து விட்டேன். இனி என் ஆத்மா சாந்தியடையும்" என்றான்.

"ருஸ்தம், எதாவது உளறாதே...நீ வருவாய் என்று எதிர் பார்க்கவே இல்லை. என் அருமைத் தங்கை ரோஷனாராவை உன் ஆசை மனைவியாக்க எண்ணியிருந்தேன்...! அதற்குள்...?" என்று அஹமத் கூறுவதற்குள் ருஸ்தம் ஆச்சரியத்துடன், "ரோஷனாரா உன் தங்கையா?" என்று கேட்டான்.

"ஆம், ருஸ்தம், ஆம்......இந்தப் பேரழகி, உன் இதய ராணி, என் தங்கைதான். இந்த விவரம் ஒரு வாரத்துக்கு முன்புதான் இவளை வளர்த்த கிழவரிடமிருந்து தெரிய வந்தது. உன்னை ஆச்சரியத்தில் மூழ்கடித்துத் திக்கு முக்காடச் செய்ய வேண்டும் என்றுதான் சொல்லாமலிருந்தேன்" என்றான் அஹமத்.

ரோஷனாரா நாணத்தால் முகம் சிவந்து தலை குனிந்தாள்.

"அஹமத், நான் என் உற்ற நண்பனைச் சந்தேகித்தேன். என்னை மன்னிப்பாயா?" என்று கண்ணீர் விட்டான் ருஸ்தம்.

ரோஷனாராவின் பிரார்த்தனைகள் ஆண்டவனின் காதில் விழுந்தன போலும்! அல்லது ஆண்டவனுக்கே இத்தகைய ஜோடியை ஒன்றாக்கிப் பார்க்க வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டதோ என்னவோ! ருஸ்தமின் கைப் புண் வெகு சீக்கிரம் குணமடைந்தது. தன்னுடைய நண்பன் அஹமத் இழந்த அரசை அடைந்து அரசாள்வதைக் கண்டு உள்ளம் பூரித்தான் ருஸ்தம்.

ரோஷனாரா இப்போது அடிமை அல்ல. அவளுடைய அழகிலும், பேச்சிலும் மயங்கிய ஒரு ருஸ்தம் அவளுக்கு அடிமையாக இருக்கும்போது, அவள் எப்படி அடிமையாவாள்?



சென்னையில் மிகப் பிரக்யாதி வாய்ந்த டைப் தயாரிப்பவர்களான மெஸர்ஸ். சுதேசி டைப் பவுண்டரியின் புரொப்ரைட்டர் ஸ்ரீ டி. ஏ. சுப்பிரமணிய முதலியார் அவர்களது குமாரத்தி, செல்வி ருக்மணி அம்மாளுக்கும் மைசூர் காட்டிலாகாவில் அஸிஸ்டெண்ட் பாரஸ்டு யுடிலைஸேஷன் ஆபீஸர், செல்வன் B. K. செல்வராஜன் B. Sc. B.T., M. Wood. Tech. (Mich) M. F. P. R. S. (U. S. A) அவர்களுக்கும் சென்ற மாதம் 28-1-51ம் தேதி மதராஸ் சாந்தோம் மணமகனின் இல்லத்தில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

**வாழ்க ருக்மணி அம்மாள் - செல்வராஜன்**

# மத்திய கேந்திரம்

— ஜெயமணி —

## ஆப்கானிஸ்தான்—3

ஏற்கெனவே ஆப்கானிஸ்தான் மீது அதிருப்தி கொண்டிருந்த பிரிட்டனுக்கு, அமானுல்லா சர்க்கார் ருஷ்யாவுடன் உடன்படிக்கை செய்து கொண்டது இன்னும் அதிக அதிருப்தியையும் ஆத்திரத்தையும் சந்தேகத்தையும் உண்டாக்கியது.

இந்நிலையில், உள்ளூற இருந்து வந்த புகையை அறிந்து கொள்ளாத அமீர் அமானுல்லா ராணி சூரையாவுடன் 1928-ல் ஐரோப்பாவுக்கு யாத்திரை சென்றார். பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மனி, இத்தாலி, ருஷ்யா, முதலிய பல நாடுகளிலும் ஆப்கன் மன்னர் தம்பதிகளுக்கு ஆடம்பரமான வரவேற்பு அளித்தார்கள். அமானுல்லாவின் நட்பைப் பெற மேற்படி நாடுகளின் சர்க்கார்கள் போட்டி போட்டுக் கொண்டு அவர்களை வரவேற்று மரியாதை செய்தனர். ஆப்கன் மன்னர் தம்பதிகளுக்கு விலையுயர்ந்த பரிசுகளும் அளித்தனர்.

அமானுல்லா தம்பதிகள் ஐரோப்பா யாத்திரையை முடித்துக்கொண்டு திரும்பி வருகையில் துருக்கி, பாரசீக நாடுகளுக்கும் விஜயம் செய்தனர். அமீர் அமானுல்லாவும் ராணி சூரையாவும் ஐரோப்பிய உடையில் யாத்திரை செய்ததைக் கண்டு முஸ்லிம் நாட்டுமக்கள் திடுக்கிட்டார்கள்.

அவரது யாத்திரையில் நிகழ்ந்த இரண்டு முக்கிய சம்பவங்களை இந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிட வேண்டும்.

அமீர் அமானுல்லா பம்பாய் வழியாகவே ஐரோப்பாவுக்குப் பிரயாணமானார். அப்போது அவருக்குப் பம்பாயில் பிரிட்டிஷ் அதிகாரிகள் ஆடம்பரமான வரவேற்பு அளித்தார்கள். அந்த வைபவத்தில் பிரிட்டிஷ் கவர்னர் உள்படப் பல உயர்தர அதிகாரிகளும் பிரமுகர்களும் பிரசன்னமாகியிருந்தனர். அப்போது அமானுல்லா உபசாரத்துக்குப் பதில் அளித்தார். பிரிட்டிஷாரைப் புகழ்ந்தோ, இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியைப் பாராட்டியோ அவர் ஏதாவது சொல்லுவார் என்று எல்லாரும் எதிர்பார்த்தனர். ஆனால் அமீர் அமானுல்லா ஒரு பெரிய வெடிகுண்டைத் தூக்கிப் போட்டு அங்கு கூடியிருந்த பிரிட்டிஷ் அதிகாரிகளும் மற்றவர்களும் திகைக்கும்படி செய்து விட்டார். அதாவது இந்தியர்கள் இங்கிலாந்துடன் உள்ள தொடர்பை அறவே கத்தரித்துக் கொண்டு விட வேண்டும் என்று யோசனை கூறினார்! அந்த அபிலாஷைக்கு முட்டுக் கட்டையாக இருப்பவர்களைக் கடுமையாகக் கண்டித்தார்!

செல்வாக்குள்ள ஒரு சுதந்திர நாட்டின் மன்னர் பிரிட்டிஷ் அதிகாரிகள் அளித்த வரவேற்பில் அவ்வாறு இந்திய தேசிய இயக்கத்தை ஆதரித்து அப்பட்டமாகக் கூறியது அதிகார வர்க்கத்தை ஒரு உலுக்கு உலுக்கி விட்டது.

இரண்டாவது சம்பவம் பாரசீக நாட்டில் நிகழ்ந்தது.

ஆப்கன் ராணி சூரையா முகமூடி அணியாமல் இருப்பதை விரும்பாத பாரசீக மன்னர் ஷா, 'ராணியிடம் முகமூடி தரிக்கச் சொல்லுங்கள்' என்று அமீர் அமானுல்லாவைப் பகிரங்கமாகக் கேட்டுக் கொண்டார்! அதிலிருந்து முஸ்லிம் மன்னர்களும் பிரமுகர்களும்கூட அமானுல்லாவின் சீர்திருத்தங்களைச் சிறிதும் விரும்பவில்லை என்பது வெளியாயிற்று.

* * *

ஆப்கன் மன்னரின் ஐரோப்பிய யாத்திரை அகில உலகத்தின் கவனத்தையும் இழுத்தது. அதனால் அமானுல்லாவின் மதிப்பு உயர்ந்ததுடன், உலகத்தில் ஆப்கானிஸ்தானின் முக்கியத்துவமும் அதிகமாயிற்று.

ஆனால் அதே சமயம் உள்நாட்டில் நெருக்கடி குமுறிக்கொண்டிருந்தது. தீவிரமான சீர்திருத்தங்களை அமுலுக்குக் கொண்டு வந்த அமீர் அமானுல்லா அதன் பலாபலன்களைத் தெரிந்து கொள்வதற்கு முன் ஐரோப்பாவுக்குச் சென்று விட்டார் அல்லவா? அதன் பலனாக, அந்தச் சீர்திருத்தங்களினால் மக்களுக்கு ஏற்பட்ட அதிருப்தியைத் தூண்டிவிடுவதற்கு விஷமிகளுக்கும் கலகப் பிரியர்களுக்கும் போதுமான அவகாசம் ஏற்பட்டது.

அமானுல்லாவுக்கு விரோதமாகப் பிரசாரம் செய்யும் விஷயத்தில் பிரிட்டிஷாரும் பூரண பங்கு எடுத்துக் கொண்டார்கள் என்று புகார்கள் எழுந்தன. அமானுல்லா எதிர்ப்புப் பிரசாரத்துக்காக எங்கிருந்தோ மாயமாகப் பணம் வந்து குவிந்தது. அமீர் அமானுல்லா மீதும் ராணி சூரையா மீதும் ஆப்கன் மக்களுக்கு வெறுப்பு உண்டாகும்படியான செய்திகள் வெளிவந்தன; பல்வேறு சூழ்ச்சிகள் நடைபெற்றன; பல விதமான வதந்திகள் கிளம்பின.

ஆப்கன் மன்னர் அமானுல்லாவும் அவருடைய மனைவியும் இஸ்லாம் மத விரோ

திகள் என்று முல்லாக்கள் நாடெங்குப் பிரசாரம் செய்து வந்தார்கள். ஆட்சேபகரமான முறையில், ஐரோப்பிய உடையில ராணி சுரையாவின் புகைப்படங்கள் எங்கிருந்தோ ஆயிரக் கணக்கில் வந்து குவிந்தன. அவை யெல்லாம் மிகச் சிரத்தையுடன் ஆப்கன் தேசம் முழுதும் மக்களுக்கு விநியோகிக்கப்பட்டன. மதப்பற்றுள்ள பாமர ஜனங்களின் ஆத்திரத்தைத் தூண்டுவதற்கு அவற்றைக் காட்டிலும் வேறு என்ன வேண்டும்?



ஆப்கன் மலைவாசி

அவ்வாறு மிகுந்த சாமர்த்தியமாகவும் தந்திரமாகவும் பிரசாரம் செய்யப்பட்டது. திரை மறைவிலிருந்து யார் அத்தகைய பிரசாரத்தை நடத்தினார்கள்? அதை நடத்துவதற்குற்ற திறமையோ பண வசதியோ அவ்வமயம் ஆப்கன் மக்களுக்கு இல்லை. எனவே, பிரிட்டிஷ் ஒற்றர்கள் தான் அந்தப் பிரசாரத்தை நடத்தினார்கள் என்று அப்போது உலக மக்கள் சந்தேகித்தனர். அமானுல்லாவுக்கு எதிராகப் போர் தொடுத்த கலகக்காரர்களிடம் பிரிட்டிஷ் துப்பாக்கிகள் இருந்ததிலிருந்தும் மேற்படி சந்தேகம் உறுதிப்பட்டது.

அமீர் அமானுல்லா கான் தமது யாத்திரையை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு ஆனந்தமாக ஆப்கானிஸ்தானுக்குத் திரும்பி வந்தபோது, அவரை ஆப்கன் மக்கள் அன்புடன் வரவேற்பதற்குப் பதிலாக அவரை வரவேற்பதற்கு மகத்தான நெருக்கடி காத்துக் கொண்டிருந்தது!

அமானுல்லா துருக்கிக்கு விஜயம் செய்த போது கெமால் பாஷாவைச் சந்தித்தார். எனவே, கெமால் பாஷாவைப் போல் தாமும் புரட்சிகரமான சீர்திருத் தங்களைச் செய்து பெயரும் புகழும் பெறவேண்டும் என்ற அவரது அபிலாஷை முன்னரைக் காட்டிலும் அதிகமாயிற்று.

அவர் சமுதாய சீர்திருத்தங்களை அமுலுக்குக் கொண்டு வருவதுடன் நிற்கவில்லை. தம்முடைய அதிகார எல்லையைக் கூடக் குறைத்துக் கொள்ள முற்பட்டார். ஜனநாயக ரீதியில் மந்திரி சபையை அமைக்கவும் ஆர்வம் கொண்டார்.

ஆயினும் என்ன? அவர் யாத்திரைக்குச் சென்ற சமயத்தில் அவரது விரோதிகள் விதைத்த விதை முளைவிட்டுச் செடியாகி மரமாகி பலனையும் கொடுக்கும் தறுவாயில் இருந்தது!

புகைந்து கொண்டிருந்த தீ முதலில் கைபர் கணவாய்க்கு அருகில் ஜ்வாலையாகக் கிளம்பியது. அங்கிருந்த ஆப்கன் மலைவாசிகள் போக்குவரத்துக்கு இன்றியமையாத கைபர் கணவாயை மூடியதுடன், சில ஆப்கன் பிரதேசங்களையும் கைப்பற்றி ஆதிக்கம் செலுத்தலாயினர்.

அதே சமயத்தில் ஆப்கன் தலைநகரான காபூலுக்கு அருகிலும் கலகம் காட்டுத் தீபோல் பரவியது. பாச்சா சாக்கோ என்ற கொள்ளைத் தலைவன் அந்தச் சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக் கொண்டு அமானுல்லா சர்க்காரை எதிர்த்துப் போரை ஆரம்பித்தான். அந்தக் கலகத்தை அடக்க அமானுல்லா செய்த உபாயங்கள் யாவும் தோல்வி யடைந்தன. எனவே வேறு வழியின்றி அமானுல்லாவும் ராணி சுரையாவும் 1929-ம் வருஷம் ராஜ்யத்தைத் துறந்து ஆப்கானிஸ்தானை விட்டு வெளியேறி ஐரோப்பாவுக்குச் சென்றனர்.

கொள்ளைக்காரர் தலைவன் பாச்சா சாக்கோ பல மாதங்கள் வரையில் ஆப்கன் மன்னனாக 'ஆட்சி' புரிந்து வந்தான் எனில், அப்போது ஆப்கானிஸ்தானின் நிலைமை எவ்வளவு படுமோசமாக இருந்திருக்க வேண்டும் என்பதைக் கற்பனை செய்து கொள்ளலாம்.

இவ்வாறாக, மகா வல்லமை பொருந்திய பிரிட்டிஷாரைப் பகிரங்கமாக எதிர்த்து வெற்றி பெற்ற அமானுல்லா கொள்ளைக்காரர்களாலும் திரை மறைவில் வேலை செய்த சதிகாரர்களாலும் தோல்வியுற்றார்.

பின்னர், அமானுல்லாவின் மந்திரியும் தளபதியுமான நாதர் ஷா பல மாதங்கள் கஷ்டப்பட்டு பாச்சா சாக்கோவைச் சிம்மாசனத்திலிருந்து வீழ்த்தியதுடன், பிரிட்டிஷாரின் உதவியால் தம்மைத் தாமே மன்னராகப் பிரகடனம் செய்து கொண்டார். அவரது ஆட்சியில் பிரிட்டிஷார் அவரது சர்க்காருக்குப் பலவித ஆயுத வகைகள் கொடுக்கும் பெருந் தொகை கடனாகக் கொடுக்கும் உதவி புரிந்து வந்தனர்.

எனினும், 1933-ம் வருஷம் நாதர் ஷா சதிகாரர்களால் கொலையுண்டதால், அவரது புதல்வரான முகமது ஸாஹிர் ஷா அவருக்குப் பிறகு பட்டத்துக்கு வந்தார். இப்போது ஆப்கானிஸ்தான் மன்னராக இருந்துவரும் முகமது ஸாஹிர் ஷாவுக்கு முப்பத்தேழு வயதாகிறது.




வசு

நகை வியாபாரம் நவகோடி செட்டியார் அவருடைய எண்பத்தி ஐந்தாவது வயதிலே படுத்த படுக்கையாகி விட்டார். அவருக்கு வைத்தியம் செய்து கொண்டிருந்த டாக்டர் நவகோடி செட்டியாரின் பிள்ளை பார்த்த சாரதியிடம் "என்னால் இயன்றமட்டும் மருந்து கொடுத்து அவரை எழுந்திருந்து நடமாடும்படி செய்கிறேன். ஆனாலும் அவருக்கு வயது அதிகமான காரணத்தால் உடம்பு தளர்ந்து விட்டது என்பதை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்!" என்றார்.

பேச்சுக்குச் சொல்லுவார்களே 'கொடுத்து வைத்த மனிதர்' என்று, அது நவகோடி செட்டியாருக்குத்தான் தகும். அவர் முதன் முதலாக நவதானியக் கடை ஒன்றை ஆரம்பித்தார். அத்துடன் தற்செயலாக நகை வியாபாரத்தையும் இணைத்தார். நாளடைவில் நவதானிய வியாபாரத்தை பந்துக்களில் ஒருவனுக்கு ஒதுக்கிவிட்டு நகை வியாபாரத்திலேயே ஈடுபட்டார். அவர் 'கொடுத்து வைத்த மனிதர்' என்பதை நிரூபிப்பது போலவே ஊரிலிருந்த ஜனங்களும் சுற்றுப் பிரதேசத்திலிருந்த பணக்காரர்களும் அடிக்கடி நவகோடி செட்டியாரின் கடைக்கு வந்து அவர்களிடமிருந்த பணத்தை நகைகளாக மாற்றிக் கொண்டு போன வண்ணமாயிருந்தனர். வாழ்க்கையிலேயே நவகோடி செட்டியார் வேண்டிய மட்டும் ஆண்டு அனுபவித்து, 'போகும் வழிக்கு' முன்னேற்பாடாக வேண்டிய தான தருமங்களையும் செய்தார். அவருடைய அமோகமான செல்வத்தை அனுபவிக்க ஒரு பெண்ணும் பிள்ளையும் பிறந்தார்கள். பெண்ணைப் பெரிய இடத்தில் கலியாணம் செய்து கொடுத்தார். பிள்ளை பார்த்தசாரதியைத் தம் தொழிலிலேயே அப்பழுக்கின்றித் திறமையடையும்வரை பயிற்சி அளித்துக் கடையை அவன் மேற்பார்வையில் விட்டு அடிக்கடி தாமும் அவனுக்கு வியாபார சம்பந்தமான வேண்டிய யோசனைகளைச் சொல்லிக் கொண்டு வந்தார்.

இந்த நிலைமையில்தான் திடீரென்று ஒரு நாள் நவகோடி செட்டியார், மயக்கம் வருகிறதென்று சொல்லிப் படுத்துக் கொண்டார். அன்று முதல் படுத்த படுக்கையாகி விட்டார். இனிமேல் அதிகநாள் உயிரோடிருக்க மாட்டோம் என்று அவருடைய உள்ளுணர்வு அவருக்கு அறிவுறுத்தியது. அவர் விருப்பத்திற்கிணங்க அவருடைய பெண், மருமகன், அவர்கள் குழந்தைகள், மற்றும் வெளியூரிலிருந்த கிட்டின உறவினர் யாவரும் அவர் வீட்டில் வந்து குழுமியிருந்தனர். வந்திருந்த ஒவ்வொருவருக்கும் தம் அளவற்ற செல்வத்தில் ஒவ்வொரு பகுதியைத் தம் கைப்படவே தஸ்தவேஜு எழுதிச் சாசனம் செய்து கொடுத்தார்.

இவ்வளவு செய்தும் அவர் மனச்சாட்சி ஏதோ ஒரு காரியம் அவர் செய்யத் தவறிவிட்டதை அவருக்கு நினைவு படுத்திக் கொண்டிருந்தது. நவகோடி யோசனையில் ஆழ்ந்தார். ஆமாம், ஒரு காலத்தில் தாம் தணிகாசல முதலியாரை வியாபாரத்தில் ஏமாற்றியதைத் தான் தம்முடைய மனச்சாட்சி சுட்டிக் காட்டுகிறது என்று தெரிந்து கொண்டார். தம் மூச்சுள்ள போதே அந்தத் தவறைச் சரிப்படுத்தி விட வேண்டும் எனவும் தீர்மானித்தார்.

அன்று இரவு கடையை மூடிவிட்டுத் திரும்பி வந்ததும் அவர் மகன் பார்த்தசாரதி வழக்கம் போல் அவருடைய கட்டிலின் அருகில் வந்து உட்கார்ந்தான். நவகோடி மெதுவான குரலில் பார்த்த சாரதியிடம் "நீ எனக்கு ஒரு காரியம் செய்ய வேண்டும். அடுத்த ஊரிலிருக்கும் பெரிய பண்ணை முதலியார் வீட்டில் முப்பது வருஷத்திற்கு முன் தணிகாசலம் என்று ஒருவர் வேலையாயிருந்தார். நீ பண்ணையார் வீட்டிற்குப் போய்த் தணிகாசலத்தைக் கையோடு கூட்டிக் கொண்டு வரவேண்டும். நான் கண்களை மூடுமுன் கட்டாயமாக அவரைப் பார்த்துப் பேசியாக வேண்டும்" என்றார்.

அதற்குப் பார்த்தசாரதி, "அப்பா, இது என்ன பிரமாதம்! காலைக்கே போய் அழைத்துக்கொண்டு வந்து விடுகிறேன். நீங்கள் கவலைப்படாமல் நிம்மதியுடன் தூங்குங்கள்" என்று சொல்லிவிட்டு எழுந்தான்.

அடுத்த நாள் காலையில் காப்பி சாப்பிட்டு முடிந்ததும் தன்னுடைய காரில் ஏறிக்கொண்டு பண்ணை முதலியார் இருக்கும் ஊரை நோக்கிக் கிளம்பினான் பார்த்தசாரதி. பண்ணை முதலியார் வீட்டை அடைந்ததும் அவர்கள் வீட்டிலுள்ள அனைவரும் வெளியூரில் நடக்கும் ஒரு கலியாணத்திற்குப் போயிருப்பதாக வீட்டு வேலைக்காரன் ஒருவன் சொன்னான். அவனிடம் பார்த்தசாரதி, தணிகாசலத்தைப் பற்றி விசாரித்த பொழுது, தணிகாசலம் அவர்கள் வீட்டை விட்டு வெளியேறி இருபது வருஷத்திற்கு மேலாகிறதென்றும் அவருடைய அப்பொழுதைய விலாசம்கூடத் தனக்குத் தெரியாதென்றும் பதில் சொன்னான்.

பார்த்தசாரதிக்குத் தான் வந்த காரியம் முடியாமல் திரும்பவேண்டியிருக்கிறதே என்று மனத்தாங்கலாக இருந்தது. இருந்தாலும் வேறு வழியின்றிக் காரில் ஏறிக்கொண்டு காரை மெதுவாக ஓட்டிக்கொண்டு ஊருக்கு வெளியே வந்தான். அங்கே சோடாக் கடை ஒன்று வைத்திருந்த கிழவனைப் பார்த்ததும் அவனிடம் தணிகாசலத்தைப் பற்றி விசாரிக்கலாம் என்று தோன்றியது பார்த்தசாரதிக்கு. அதற்கு முன்

ஏற்பாடாகக் காரைவிட்டு இறங்கி கிழவனிடம் ஒரு ஐஸ் போட்ட கலர் ஒன்றை வாங்கிச் சாப்பிட்டு விட்டு அதற்குரிய சில்லறையைக் கிழவனிடம் கொடுத்தான். பிறகு கிழவனிடம், ''நீங்கள் இந்த ஊரில் எத்தனை வருஷமாகக் கடை வைத்திருக்கிறீர்கள் !'' என்றான்.

''அதுவா ! முப்பது வருஷத்திற்கு மேலே ஆகுதுங்க'' என்றான் கிழவன்.

''இந்த ஊர்ப் பெரிய பண்ணை முதலியார் வீட்டில் தனிகாசலம் என்று ஒருவர் ரொம்ப நாளைக்கு முன் வேலையிலிருந்தாராமே, அவரை உங்களுக்குத் தெரியுமா !'' என்று கேட்டான் பார்த்தசாரதி.

கிழவன் தலையைச் சொறிந்த வண்ணம் யோசனையில் ஆழ்ந்தான். கொஞ்ச நேரம் கழித்து ''ஆமாம, ஞாபகம் வருதுங்க. அவரு நம்ம கடையிலேயேதான் அப்போ எல்லாம் வெத்திலைப்பாக்குப் போட வருவாருங்க. அவரு இந்த ஊரை விட்டுப் போய் இருபது வருசத்துக்கு மேலே இருக்குங்க. அதுக்கப்புறம் அவரு ஏதோ துணிக் கடை வெச்சிருக்காருன்னு எனக்கு யாரோ சொன்ன ஞாபகம். அவரு இருக்கிற ஊரு இங்கே யிருந்து ஐம்பது மைலுக்குள்ளதான் இருக்குங்க. பேரு இப்போ நெனவுக்கு வல்லீங்க'' என்றான் கிழவன்.

கிழவனுக்குத் தன் நன்றியைத் தெரிவித்து விட்டுக் காரில் ஏறிக் கொண்டு அவ்வூரிலிருந்து கிழக்கு நோக்கிப் போய்க் கொண்டிருந்த ரஸ்தாவின் வழியாகப் பிரயாணமானான் பார்த்தசாரதி. நாற்பது மைல்கள் சென்றதும் அவன் போய்க் கொண்டிருந்த ஊரின் கடைத்தெருவில் 'தனிகாசலம் ஜவுளி ஸ்டோர்ஸ்' என்ற பெரிய போர்டைப் பார்த்ததும் காரைக் கடை வாசலில் நிறுத்திவிட்டு உள்ளே நுழைந்தான். தனிகாசலம் அப்பொழுதுதான் கடையை விட்டு ஊருக்கு வெளியே யிருந்த தம் வீட்டிற்குப் போயிருப்பதாகத் தகவல் தெரிந்தது. கடையிலிருந்த சிப்பந்தி ஒருவன் அனுப்பிய பையனுடன் காரை ஓட்டிக் கொண்டு, அந்தப் பையன் காட்டிய வழியைப் பின்பற்றி ஊருக்கு வெளியே யிருந்த தோட்டத்தின் நடுவில் அமைந்திருந்த பங்களா ஒன்றை அடைந்தான்.

கூட வந்த பையன் பார்த்தசாரதியைத் தனிகாசலம் இருந்த அறைக்கு அழைத்துச் சென்றான். பிறகு அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருப்பதற்கு இடையூறாக இல்லாமல் பையன் கடைக்குத் திரும்பினான்.

பார்த்தசாரதி தனிகாசலம் காட்டிய ஆசனத்தில் அமர்ந்ததும், ''நீங்கள் ரொம்ப நாளைக்கு முன் பெரிய பண்ணை முதலியார் வீட்டில் வேலையா யிருந்தீர்களா !'' என்றான்.

''ஆமாம், அதற்கு என்ன இப்பொழுது ! நீங்கள் யார் !'' என்றார் தனிகாசலம்.

''நான் நகை வியாபாரம் நவகோடி செட்டியாரின் பிள்ளை. என் பெயர் பார்த்தசாரதி. என் தகப்பனார் உங்களுடன் ஏதோ பேச வேண்டுமாம். கையுடன் அழைத்துக் கொண்டு வரச் சொன்னார்'' என்றான் பார்த்தசாரதி.

தனிகாசலம் ஒரு கணம் யோசித்து விட்டு ''ஓகோ ! நவகோடியின் மகனா நீங்கள் ! சரி, சரி, என்ன விசேஷம்'' என்று கேட்டார்.

''இல்லை. என் தகப்பனார் வியாதியால் படுத்த படுக்கையாயிருக்கிறார். வயதும் ஆகிவிட்டதால் நிலைமை கவலைக்கிடமாயிருக்கிறது. அவர் நினைவு சரியாக இருக்கும்போதே உங்களைப் பார்த்துப் பேச வேண்டுமென்று விரும்புகிறார். இன்று காலை வீட்டை விட்டுப் புறப்பட்டு, நீங்கள் வேலையாயிருந்த பெரிய பண்ணை முதலியார் ஊருக்குப் போய் அங்கு உங்களைக் காணாமல், யாரோ ஒருவர் சொன்ன தகவலின் பேரில் நான் இந்த ஊருக்கு வந்தேன். என்னுடைய வார்த்தைகளை நீங்கள் தட்டக்கூடாது !'' என்றான் பார்த்தசாரதி வினயமான குரலில்.

''சரி. இரண்டு பேரும் சாப்பிட்டு விட்டுப் புறப்படலாம்'' என்றார் தனிகாசலம்.

## 2

சாப்பிட்டானதும் பார்த்தசாரதியும் தனிகாசலமும் புறப்பட்டார்கள். வீட்டை அடைந்ததும் பார்த்தசாரதி, தனிகாசலத்தை நவகோடி செட்டியார் இருந்த அறைக்குள் அழைத்துக் கொண்டு போனான். கட்டிலின் பக்கத்திலிருந்த நாற்காலியில் தனிகாசலம் அமர்ந்தார். பார்த்தசாரதியிடம் அறைக்கதவை மூடி விட்டு வெளியே போகும்படி சொன்னார் நவகோடி. பிறகு தனிகாசலமும் நவகோடி செட்டியாரும் தனியாக இருந்தனர்.

நவகோடி தனிகாசலத்தைப் பார்த்து, ''உங்களுக்கு நான் கொடுத்த சிரமத்திற்காக மன்னிக்கவும். ஆனாலும் எனக்கு அதிகாலம் இந்த உயிர் உடலில் தங்காது என்று தோன்றுகிறது. அதற்கு முன் உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டியிருக்கிறது. நீங்கள் என்னுடைய வேண்டுகோளை ஏற்றுக் கொண்டால் என் மனத்துக்கு ரொம்பத் திருப்தியாயிருக்கும்'' என்ற பீடிகையுடன் மேலும் தொடர்ந்தார்.

''முப்பது வருஷங்களுக்கு முன் நான் முதன் முதலாக நகைக்கடை ஆரம்பித்ததும் ஒரு நாள் ஏழு கல்கள் பதித்த ஒரு மோதிரத்தை நீங்கள் என்னிடம் விற்பனைக்காகக் கொண்டு வந்தது உங்களுக்கு ஞாபகமிருக்கலாம்'' என்றார்.

சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்து விட்டு தனிகாசலம், ''ஆமாம்'' என்றார்.

நவகோடி மேலும், ''அதை வாங்கிக்கொண்டு நான் உங்களுக்கு நூறு ரூபாய் கொடுத்ததாக ஞாபகம். உண்மையிலேயே அந்த மோதிரத்தில் பதித்திருந்த கற்கள் உயர்ந்த ஜாதி வைரங்கள். இருந்தாலும் அவைகள் சாதாரணமான வெள்ளைக் கற்கள் என்றும் விலை சொற்பம் என்றும் நான் சொன்னதை நீங்கள் முழுவதும் நம்பி நான் கொடுத்த நூறு ரூபாயை வாங்கிக் கொண்டு போனீர்கள். நீங்கள் போன ஒரு வாரத்திற்கெல்லாம் அந்த மோதிரத்தை ஆயிரம் ரூபாய்க்கு விற்றேன். அந்தப் பணத்தை வைத்துக் கொண்டுதான் மேற் கொண்டு தங்க நகைகள், வெள்ளி நகைகள் வாங்கி வியாபாரத்தை விஸ்தரித்தேன். அன்றுமுதல் வியாபாரம் விருத்தியாகி

இன்றைக்கு இந்த ஊரிலுள்ள பெரிய மனிதர்களில் ஒருவனாக இருக்கிறேன். கைவிரல் விட்டு எண்ணக்கூடிய பணக்காரர்களில் முதல் ஸ்தானம் வகிக்கிறேன். வாழ்க்கையில் நான் அனுபவிக்க வேண்டிய சுக போகங்கள் எல்லாவற்றையும் அனுபவித்து விட்டேன். இன்னும் சில நாட்களில் நான் இறந்து போய் விடுவேன். அதைப் பற்றி எனக்கு வருத்தம் கிடையாது. உங்கள் நம்பிக்கையைப் பயன்படுத்திக்கொண்டு உங்களை ஒரு காலத்தில் தெரிந்து கொண்டே ஏமாற்றியதற்குப் பிராயச்சித்தமாக நான் தயாராக வைத்திருக்கும் இந்த ஐயாயிரம் ரூபாயை உங்களிடம் கொடுத்து விட்டால்தான் எனக்கு மனச்சாந்தி ஏற்படும். இதை நீங்கள் வாங்கிக் கொள்ள மறுக்கக் கூடாது'' என்று சொல்லித் தலையணைக்கு அடியில் வைத்திருந்த ஐயாயிரம் ரூபாய் கொண்ட கட்டு ஒன்றைத் தனிகாசலத்தினிடம் நவகோடி கொடுத்தார்.

தயக்கத்துடன் அதைத் தனிகாசலம்வாங்கிக் கொண்டார். பிறகு சம்பிரதாயமாக நவகோடியைப் பார்த்து, ''நீங்கள் தைரியமாயிருங்கள். இன்னும் கொஞ்ச நாட்களில் உடம்பு சௌகரியமாகி விடும்'' என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டு வெளியேறினர்.

## 3

நவகோடி செட்டியாருக்கு மன அமைதி ஏற்பட்ட அதே கணத்திலிருந்து தனிகாசலத்திற்கு மன அமைதி குலைய ஆரம்பித்தது. அவர் வீடு வந்து சேருவதற்குள் இருட்டி விட்டது. சாப்பிட்டு விட்டுப் படுக்கப்போனர். எப்பொழுதுமே தலையணையின் மேல் தலையை வைத்ததும் அவரை வந்து ஆட்கொள்ளும் ஆனந்தமயமான நித்திரை அன்று அவரைப் புறக்கணித்து விட்டது. எவ்வளவோ முயன்றும் கண் இமைகள் மூட மறுத்து விட்டன. அவர் மனக்கண்முன், முப்பது வருஷங்களுக்கு முந்தி நவகோடி செட்டியாரிடம் கற்கள் பதித்த மோதிரம் ஒன்றை விற்ற நிகழ்ச்சியும் அந்த மோதிரம் தம் கைக்கு எட்டியவிதமும் மாறி மாறி வந்து கொண்டிருந்தன.

பெரிய பண்ணை முதலியார் வீட்டில் ஒரு சாதாரண வேலையாளாக எட்டு வயதிலேயே போய் அமர்ந்தார் தனிகாசலம். பெரிய பண்ணை முதலியார் கொடுத்த வேலைகளைச் சீக்கிரமாகவும் நருவிசாகவும் செய்து கொண்டே வந்து முதலியாரின் அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமானர். கிட்டத்தட்ட இருபதாவது வயதிலே பெரிய கணக்குப்பிள்ளையிடம் வழக்கமாக ஒப்படைக்கப் பட்டிருந்த சிலவேலைகளை முதலியார் வேண்டுமென்றே தனிகாசலத்திற்கு மாற்றினர். அதையும் அப்பழுக்கில்லாமல் செய்து வந்த தனிகாசலத்தின் பேரில் முதலியாரின் மனைவிக்கு என்றுமில்லாத ஒரு அலாதியான நம்பிக்கை ஏற்பட்டது.

இந்தச் சமயத்தில்தான் ஒரு தடவை அவள் தனிகாசலத்தைக் கூப்பிட்டு வீட்டிலிருந்த நகைகள் அனைத்தையும் தட்டானிடம் கொண்டு போய்ச் சுத்தம் செய்து, மெருகிட்டுக் கொண்டு வரவேண்டும் என்று தெரிவித்தாள். அடுத்தநாள் முதல் ஒவ்வொரு நாளும் தனிகாசலம் அந்த அம்மாள் கொடுத்த நகைகளைக் காலையில் தட்டான் வீட்டுக்குக் கொண்டு போவார். அவைகள் மெருகேடப் பட்டதும் அவைகளை வாங்கிக் கொண்டு வந்து முதலியார் மனைவியிடம் திரும்பச் சேர்ப்பார். இப்படி நடந்து கொண்டிருக்கும் போதுதான் ஒரு நாள் அந்தக் கற்கள் பதித்த மோதிரத்தை சுத்தம் செய்து மினுக்கச் செய்து தட்டான் வீட்டிலிருந்து திரும்பும்போது ஒரு எதிர்பாராத சம்பவம் அவருக்காக முதலியார் வீட்டில் காத்திருந்தது. அது வேறொன்றுமில்லை. திடீரென்று அன்று பிற்பகல் முதலியாரின் மனைவி மாரடைப்பினல் காலமானதுதான். தனிகாசலம் கூட இருந்து மேற் கொண்டு கவனிக்கவேண்டிய விஷயங்களைக் கவனித்தார். அன்றைய விசேஷங்கள் முடிந்தன. தனிகாசலத்துக்குத் தாம் கொண்டு வந்திருந்த மோதிரத்தைத் திருப்பிக்கொடுக்கவேண்டிய ஞாபகம் வந்தது. ஆனல் அதே சமயத்தில் அவர் மனம் பேதலித்தது. மோதிரத்தைக் கொடுக்காமல் தம்மிடமே வைத்துக் கொண்டு விட்டார்!

வருஷம் இரண்டு கழிந்தது. தனிகாசலத்தின் வசம் இருந்த மோதிரத்தைப் பற்றி முதலியார் வீட்டில் ஒருவரும் கவனித்ததாகத் தெரியவில்லை. என்ன இருந்தாலும் குற்றமுள்ள அவர் நெஞ்சு குறு குறு என்று சொல்லிக் கொண்டிருந்தது. தனிகாசலம் ஏதோ காரணங்கள் சொல்லி மெதுவாகப் பண்ணை முதலியார் வீட்டு வேலையிலிருந்து விலகிக் கொண்டார். சில நாட்கள் கழிந்துத்

தூங்கியவர்:—சொப்பனத்தில், யாரோ ஏராளமான நகைகளையும் பவுன்களையும் கொண்டு



வந்து என்னிடம் கொடுத்தார், உடனே ஒரு திருடன் வந்து அவ்வளவு நகைகளையும் பவுன்களையும் திருடிக் கொண்டு ஓடியே போய்விட்டான். அதனுல்தான் ஒரு மாதிரியா இருக்கேன்.



மற்றவர்:— நீங்க ஒண்ணு! அப்படிப் பணம் வந்தால், உடனே 'பளிச்'சின்னு விழித்துக் கொண்டு இருக்கப்படாதா? திருடன் கொண்டு போகிற வரையிலா ஒரு மனுஷன் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டு இருப்பான்?

தம்மிடமிருந்த மோதிரத்தைக் காசாக மாற்றி விடுவதே மேல் என்று நினைத்து நவகோடி செட்டியாரிடம் கொண்டு போய் விற்றார். செட்டியார் அதன் பெறுமானம் நூறு ரூபாய் தான் என்று சொன்னதும் தணிகாசலத்துக்கு ஏமாற்றமாயிருந்தது. இருந்தாலும் கிடைத்தது லாபம் என்று எண்ணிக் கொண்டார். கையில் கிடைத்த ரூபாயைக் கொண்டு போய் வெளியூர் ஒன்றில் ஒரு சிறிய துணிக்கடை ஆரம்பித்தார். அதிர்ஷ்டம் அவர் பங்கில் இருந்தது. அடுத்து அடுத்து இரண்டு உலக யுத்தங்களும் அதனால் துணிக்குத் தட்டுப்பாடும் வந்தது. கையிலிருந்த சரக்கை ஒன்றுக்குப் பத்தாக விலை வைத்து விற்றார் தணிகாசலம். மிலிட்டரிக்கு சப்ளை செய்ய கண்டிராக்டுகள் எடுத்துப் பெரிய மில் முதலாளிகளுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு லக்ஷக்கணக்காக பணத்தைச் சேமித்தார். ஊரிலுள்ள தனவந்தர்களுள் ஒருவராகத் திகழ ஆரம்பித்தார்.

இவ்வளவு விஷயங்களும் அவர் மனத்திரையில் சங்கிலித் தொடர் போல் ஒன்றன் பின் ஒரு நிகழ்ச்சியாக தோன்றியவண்ணமிருந்தன. அன்று மாலை நவகோடியின் நடத்தையைப் பார்த்ததும் தணிகாசலம் தானும் ஏன் தம்முடைய துரோகத்திற்குப் பரிகாரமாகப் பெரிய பண்ணை முதலியார் வீட்டிற்குப் போய், தம் தவறை ஒப்புக் கொண்டு நவகோடி செட்டியார் கொடுத்திருந்த ஐயாயிரம் ரூபாயையும் முதலியார் வீட்டில் சேர்த்து விட்டு வரக் கூடாது என்று தம்மைத் தாமே கேட்டுக் கொண்டார். அப்படிச் செய்வதுதான் உசிதம் என்று அவர் மனச்சாட்சி ஆக்ஞை இட்டது.

## 4

மறு நாள் பொழுது விடிந்ததும் விடியாததுமாகத் தணிகாசலம் அவசரம் அவசரமாகக் காலை ஆகாரத்தை முடித்துக் கொண்டு நவகோடி செட்டியார் கொடுத்த ஐயாயிரம் ரூபாயுடன் புறப்பட்டு அன்று பிற்பகல் பெரிய பண்ணை முதலியார் வீட்டை அடைந்தார். அங்கு போனதும்தான் பெரிய பண்ணை முதலியார் காலமாகிப் பத்து வருஷங்களுக்கு மேலாகி யிருந்த தகவலை அறிந்து கொண்டார். அவருடைய மூத்த பையன் முனுசாமி வந்திருந்த தணிகாசலத்தை அடையாளம் தெரிந்து கொண்டு க்ஷேம லாபங்களை விசாரித்தான். அதன் முடிவில் தணிகாசலம் முனுசாமியிடம், ''உங்களிடம் நான் சில வார்த்தைகள் தனிமையில் பேச வேண்டியிருக்கிறது'' என்றார். முனுசாமி தன்னுடைய பிரத்தியேக அறைக்குத் தணிகாசலத்தை அழைத்துக் கொண்டு போனான். அங்கே போய் இருவரும் ஆசனங்களில் அமர்ந்ததும் தணிகாசலம் அதற்கு முன் தினம் நவகோடி செட்டியார் வீட்டிற்குத் தாம் போயிருந்தபோது நடந்த சம்பவத்தையும் அதில் சம்பந்தப்பட்ட மோதிரம் தம் கைக்கு வந்த விதத்தையும் எடுத்துச் சொல்லி விட்டு, அந்த மோதிரத்தை விற்று வந்த பணத்தை முதலாகப் போட்டு ஆரம்பித்த அவருடைய துணி வியாபாரம் அன்று செழித்தோங்கி அவருக்கு அமோகமான ஐசுவரியத்தையும் அந்தஸ்தையும் கொடுத்திருப்பதையும் தெரிவித்தார். பின், கடைசியாக தாம் செய்த துரோகத்தை மன்னிக்கும்படி மனமுருகக் கேட்டுக்கொண்டு, நவகோடி செட்டியார் கொடுத்த ஐயாயிரம் ரூபாயும் முனுசாமியின் குடும்பத்திற்கு உரியது என்ற காரணத்தால் அதைப் பெற்றுக் கொள்ளும்படி வற்புறுத்தினார். முனுசாமிக்குத் தணிகாசலம் சொன்ன விருத்தாந்தம் ஆச்சரியமாயிருந்தது. அவர் கொடுத்த பணத்தைப் பெற்றுக் கொண்டார். தணிகாசலம் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு வெளிக்கிளம்பினார். அலைபாய்ந்து கொண்டிருந்த மனம் அமைதி அடைந்தது.

தணிகாசலம் சொன்ன வர்த்தமானத்தில் வந்த நவகோடி செட்டியாரின் பெயரைக் கேட்டதும் முனுசாமிக்கு அவனுடைய தகப்பனார் பெரிய பண்ணை முதலியார் மரணப் படுக்கையிலிருக்கும்போது தன்னை அழைத்துச் சொன்ன வார்த்தைகள் ஞாபகத்திற்கு வந்தன. முதலியார் இறந்து போவதற்கு இரண்டு நாட்களுக்கு முன் முனுசாமியை அருகில் அழைத்து, ''முனுசாமி! என் ஆயுள் முடிவடையும் காலம் நெருங்கிவிட்டது. ஒரே ஒரு காரியத்தில் நான் தெரிந்து செய்த பிழையை நிவர்த்திக்க மறந்து விட்டேன். அதை நீயாவது செய்து முடிக்க வேண்டும். அதுவே எனக்கு நீ செய்யும் கடமையாகும். நானும் அடுத்த ஊரிலிருந்த புண்யகோடி செட்டியாரும் ஒரு காலத்தில் நெல் வாங்கி விற்கும் கூட்டு வியாபாரம் செய்தோம். புண்யகோடி என்னையே முழுக்க முழுக்க நம்பியிருந்தார். என்னிடம் கணக்குக்கூடக் கேட்பதில்லை. திடீரென்று ஒரு நாள் அவர் இறந்து போய் விடவே, என் புத்தி தடுமாறியது. அவருடைய பங்குத் தொகையை நான் அமுக்கிவிட்டேன். ஆகவே, நீ நம்முடைய பழைய கணக்குப் புஸ்தகங்களை மறுபடியும் பரிசீலனை செய்து அவர் மகன் நவகோடிக்குச் சேரவேண்டிய பணத்தைச் சேர்த்து விடு!'' என்றார்.

தகப்பனார் இறந்து சில நாட்கள் கழித்து முனுசாமி பழைய கணக்குப் புஸ்தகங்களைப் புரட்டிப் பார்த்தான். கிட்டத்தட்ட நாலாயிரம் ரூபாய்வரை கொடுக்க வேண்டியிருந்தது. அந்தத் தொகை கொஞ்சம் அதிகம் என்று அவன் மனதில் தோன்றவே, மேல் நடவடிக்கை ஒன்றும் எடுக்காமலேயே இருந்து விட்டான். இப்பொழுது எதிர்பாராதவிதமாகத் தணிகாசலத்தினிடமிருந்து ஐயாயிரம் ரூபாய்கள் அவன் கைக்கு எட்டவே தகப்பனாரின் அந்திய காலத்து விருப்பத்தைப் பூர்த்தி செய்து விடுவதென்ற முடிவுக்கு வந்தான். ஆனாலும் உடனேயே நவகோடி செட்டியாரைப் போய்ப் பார்க்க முடியாமல் நெல் அறுவடை காலம் குறுக்கிட்டது. அதில் ஈடுபட்டு இருந்த முனுசாமிக்கு ஒரு மாத காலம் கழித்துத்தான் ஊரைவிட்டு வெளியேற அவகாசம் கிடைத்தது.

ஒரு நாள் பிற்பகல் முனுசாமி தணிகாசலத்திடமிருந்து கிடைத்த ஐயாயிரம் ரூபாயுடன் நவகோடி செட்டியார் இருந்த ஊரை அடைந்தான். நவகோடி செட்டியார் வீட்டை அடையும் பொழுது மாலை நேரமாகி விட்டது. அங்கு போனதும் நவகோடி காலமாகி ஒரு மாதத்திற்கு மேலாகி விட்டது என்றும், அவருடைய பையன் பார்த்தசாரதி அன்று நகரத்

தின் பொது ஜனங்கள் நவகோடி செட்டியாரின் மறைவுக்காக அனுதாபம் தெரிவிக்க ஏற்பாடு செய்திருந்த கூட்டத்திற்குப் போயிருப்பதாகவும் தெரிந்து கொண்டான். நவகோடி செட்டியார் உயிருடன் இருக்கும் போதே வராமல் போய்விட்டோமே என்ற வருத்தம் முனுசாமிக்கு அதிகமாக இருந்தது.

அவன் மனத்தை அரித்துக்கொண்டிருந்த இந்த விஷயத்தை யாரிடமாவது சொல்லி மன ஆறுதல் பெறலாம் என்றால் அதுவும் முடியவில்லை.

தன் தகப்பனார் இட்ட கட்டளையைப் பூர்த்தி செய்வதில் ஏற்பட்ட தாமதத்தைப் பற்றிப் பார்த்தசாரதியிடம் சொல்லுவதற்கும் அவன் மனம் கூசியது. எதற்கும் யோசித்துக் கொள்ளலாம் என்று கூட்டம் நடக்கும் இடத்தை அடைந்தான்.

கூட்டத்திற்குத் தலைமை வகித்துக் கொண்டிருந்த அந்த ஊர்ப் பிரமுகர் ஏற்கெனவே முனுசாமிக்குப் பரிச்சயமானவர். முனுசாமியைப் பார்த்த அவர் சைகை காட்டி முனுசாமியைத் தம் அருகில் மேடைமேலிருந்த ஒரு நாற்காலியில் அமரும்படி செய்தார்.

கூட்டத்தில் பேசின அனைவரும் காலஞ்சென்ற நவகோடி செட்டியாரின் தான தருமங்களைப் பற்றியும், உதார குணத்தைப் பற்றியும், அவருக்கிருந்த சமூக சேவையிலுள்ள ஆர்வத்தைப் பற்றியும் பாராட்டிப் பேசினார்கள். இந்தச் சமயத்தில் முனுசாமிக்கு அவன் மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்த பிரச்னையைத் தீர்க்கும் யோசனை ஒன்று தோன்றியது. அக்கிராசனர் காதருகில் போய்க் கொஞ்ச நேரம் ஏதோ பேசிவிட்டுத் தாம் கொண்டு வந்திருந்த ஐயாயிரம் ரூபாய் கொண்ட பொட்டலத்தை அவர் கையில் கொடுத்து விட்டுத் தன் இருப்பிடத்தில் வந்து அமர்ந்தான் முனுசாமி.

அதை அடுத்து அக்கிராசனர் எழுந்திருந்து, "இப்பொழுது அநேகர் நவகோடி செட்டியார் செய்த அரிய சேவைகளைப் பற்றியும், தான தருமங்களைப் போற்றியும் பேசினார்கள். ஆனால் இதோ கூட்டத்திற்கு வந்திருக்கும் முனுசாமி அவர்கள் காலஞ்சென்ற நவகோடி செட்டியாரின் ஞாபகார்த்தமாக அவருடைய பெயரை வைத்து ஒரு ஞாபகச் சின்னம் எழுப்பும்படி விரும்புகிறார். அதற்கு அனுசரணையாக என்னிடத்தில் இதோ ஒரு ஐயாயிரம் ரூபாயைக் கொடுத்து அதை நவகோடி அவர்களின் மகன் பார்த்தசாரதியிடம் சேர்ப்பிக்கும்படி வேண்டிக் கொள்கிறார்" என்று சொல்லி பார்த்தசாரதியிடம் அந்தப் பணத்தைக் கொடுத்தார்.

இதைக் கேட்ட சபையோரின் ஆரவாரம் அளவு கடந்து போயிற்று. கூட்டத்திற்கு வந்திருந்த அனைவரும், முனுசாமி பார்த்தசாரதியிடம் சேர்த்த ஐயாயிரம் ரூபாய்களும் பார்த்தசாரதியின் குடும்பத்திற்கு நியாயமாகச் சேரவேண்டிய பணம் என்று தெரியாத காரணத்தால் முனுசாமியின் உதாரகுணத்தை அளவுக்கு மீறிப் பாராட்டி விட்டார்கள். எப்படியோ ஒருவிதமாகத் தகப்பனாரின் மனோபீஷ்டத்தை நிறைவேற்றியதனால் ஏற்பட்ட பெருமிதத்துடன் முனுசாமி ஊருக்குத் திரும்பினான்.

---

# பஞ்ச நிவாரண ஆசி!






## 3. புறாவும் கிளியும்

பூனை உருவத்திலிருந்து வெளிப்பட்ட ராஜகுமாரனைப் பார்த்துத் திகைத்து நின்ற மகாராஜாவுக்குச் சற்று நேரம் பிடித்தது அந்தத் திகைப்பு நீங்குவதற்கு. பிறகு விஜயகுமாரனைப் பார்த்து, "ராஜகுமாரனாகப் பிறந்து இதெல்லாம் என்ன விளையாட்டு விஜயா? வேண்டாமே!" என்றார் மகாராஜா.

"ராஜா என்றால் எல்லா வித்தையும்தான் கற்றிருக்கவேண்டும். விக்கிரமாதித்ய மகாராஜா கூடுவிட்டுக் கூடு பாய்கிற வித்தைகூடத்தான் கற்று வைத்திருந்தாராமே!" என்று வாதித்தான் விஜயகுமாரன்.

குழந்தைகளுடன் வாதம் பண்ணி எந்தப் பெற்றோர் ஜெயித்தார்கள்? அதனால் மகாராஜாவும் ஒன்றும் பதில் சொல்லவில்லை விஜயனுக்கு!

இப்படிக் கூறி முடித்து ஒரு மூச்சு வாங்கச் சற்று நிறுத்தினார் தாத்தா.

ஆனால் கதையை வெகு சுவாரஸ்யமாகக் கேட்டுக் கொண்டிருந்த குழந்தைகள் மூலைக்கு ஒருவராக, "அப்புறம் என்ன ஆச்சு, தாத்தா? மேலே கதையைச் சொல்லுங்கள்" என்று கேட்கத் தொடங்கினார்கள்.

தாத்தாவும் குழந்தைகளின் கதை கேட்கும் ஆவலைக் கண்டு மகிழ்ந்து கதையை மேலே தொடர்ந்தார்.

அதற்குப் பிறகு ராஜகுமாரன் விஜயன் அடிக்கடி மாயப் பொடியை வாயில் போட்டுக் கொண்டு ஒரு உருவம் இல்லாவிட்டால் இன்னொரு உருவம் எடுத்துக் கொள்வான்.

ஒரு நாள் சிட்டுக் குருவி உருவம் எடுத்து ஊரெல்லாம் சுற்றினான். ஒவ்வொரு வீட்டுக்குள்ளும் நுழைந்து யார் யார் என்ன என்ன செய்கிறார்கள் என்று பார்த்து மகிழ்ந்தான்.

இன்னொரு நாள் கழுதையின் உருவம் எடுத்து, அதைப் போல் கத்திச் சந்தோஷப்பட்டான்.

மற்றொரு நாள் புலியைப் போல் உருவம் எடுத்துக் காடெல்லாம் சுற்றி மற்ற மிருகங்களைப் பயமுறுத்தினான்.

ஆனால் எந்த வேடிக்கையும் எந்த விளையாட்டும் நீண்ட நாள் தொடர முடியாது அல்லவா? ஆகவே, அவன் கடைசியாக ஒரு புறா வடிவம் எடுத்தான். ஆனால் புறா வடிவம் எடுத்த போது, அதுதான் தான் எடுக்கப் போகும் கடைசி உருவம் என்பது விஜயனுக்குத் தெரியாது, பாவம்!

புறா உருவத்தில் அன்று நிர்ப்பயமாகக் காட்டில் பறந்து பறந்து சுற்றி வந்தான். அப்போது அவன் அடைந்த ஆனந்தம் கொஞ்ச நஞ்சமல்ல!

இவ்விதம் பறந்து சுற்றி வந்த போது, ஒரு மரத்தடியில் ஒரு வான் கோழி ஏதோ செய்து கொண்டிருந்ததைப் பார்த்தான். உடனே பறந்து போய் அந்த மரத்தில் உட்கார்ந்து கொண்டான். அது என்ன செய்கிறது என்று கூர்ந்து பார்த்தான்.

வான்கோழி தன் பொல்லாச் சிறகை விரித்து, ஒரு கால் மாற்றி ஒரு கால் தூக்கி வைத்துக் குதித்தது. 'இந்த

மாதிரி ஏன் செய்கிறது? இதற்கு ஏதாகிலும் பைத்தியம் கியித்தியம் பிடித்து விட்டதோ?' என்றெல்லாம் எண்ணினான். கடைசியில் இதற்குக் காரணம் என்னவென்று வான்கோழியையே கேட்டுவிடுவது என்று தீர்மானித்தது விஜயப்புரு.

"வான்கோழி! வான்கோழி! நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உன் செய்கையின் அர்த்தமே எனக்கு விளங்கவில்லையே!" என்றது புரு.

"இன்றைக்குச் சிம்மராஜாவின் சன்னிதானத்தில் பெரிய நடன அரங்கு நடக்கப் போகிறது. அதில் மயில் தான் நடனம் பண்ண ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்த மயிலை அவமானப்படுத்தத் தீர்மானித்து விட்டேன். நானும்தான் கேட்கிறேன், இந்த மயிலுக்குத்தான் சிறகு இருக்கிறதோ? எனக்கும்தான் இருக்கிறது. பின் இந்த மயிலை விட நான் எந்த விதத்தில் தாழ்த்தி? ஆகவே, இன்றைய நடன அரங்கில் நானும் நாட்டியமாடப் போகிறேன். அதற்குத் தான் இப்பொழுது ஒத்திகை நடத்திப் பழகிக் கொள்கிறேன்" என்றது வான்கோழி.

உடனே விஜயப் புரு "ஓகோ! எங்கே? ஆடு, பார்க்கலாம். உன் ஆட்டம் மயிலின் நடனம் போலிருக்கிறதா அல்லது அதைவிட உயர்த்தியாக இருக்கிறதா என்று பார்ப்போம்!" என்றது மனசுக்குள் சிரித்துக் கொண்டே.

உடனே வான்கோழி தன் பொல்லாச் சிறகை விரித்து, 'தா தை, தக்கத் தை' என்று குதித்தது. அந்தக் கோரக் காட்சியைப் பார்த்ததும், விஜயப் புருவுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. மனிதக் குரலில் 'ஹஹ்ஹா! ஹஹ்ஹா!' என்று சிரித்து விட்டது. மனிதக் குரலில் சிரிப்பின் ஒலி கேட்டதும் வான்கோழி மிரண்டு விட்டது! விஜயப் புருவுக்கும் தான் எவ்வளவு பெரிய தவறு செய்துவிட்டோம் என்பது தெரிந்து விட்டது. ஆகா! புரு உருவத்தை விட்டுச் சுய உருவம் அடைய உதவும் அந்த மந்திர மொழி விஜயப் புருவுக்கு அந்தக் கணமே மறந்து விட்டது. எவ்வளவு ஞாபகப் படுத்திக் கொண்டும் நினைவு வரவில்லை. 'இனி இந்தப் புரு உருவத்தை விட்டு ஒழிக்க முடியாதே' என்று ஏங்கியது.

பாவம், விஜயப் புரு! மனித உருவத்திலிருந்தபோது, புருக்கள் எவ்வளவு சந்தோஷமாக இருக்கின்றன! எவ்வளவு உல்லாசமாகப் பறந்து திரிகின்றன என்றெல்லாம் நினைத்தது! இப்போதல்லவா புருவின் வாழ்வு அப்படியொன்றும் சந்தோஷகரமான வாழ்வல்ல; அதன் வாழ்விலும் கஷ்ட சுகம் இருக்கிறது என்பது தெரிய வருகிறது! மேலும் காடை, கௌதாரி, ராஜாளி போன்ற பறவைகளிடமிருந்தெல்லாம் தப்பி வாழ்வது என்பது அப்படியொன்றும் இலேசான காரியமாகத் தோன்றவில்லை விஜயப் புருவுக்கு.

இப்படிப் புரு உருவத்தில் எங்கெல்லாமோ சுற்றிக் கொண்டிருந்தான் விஜயகுமாரன். பல தேசங்கள், பல நாடுகள் கடந்து சென்று கொண்டிருந்தான். ஆம், புரு உருவத்திலிருந்து மனித உருவம் அடைய முடியாத போது, எந்தத் தேசத்திலிருந்தால் என்ன? எந்தக் காட்டில் இருந்தால் என்ன என்று தோன்றவே தான் விஜயகுமாரன் இப்படிப் பல நாடுகள் கடந்து பறந்துகொண்டிருந்தான். கிட்டத்தட்ட ஒரு வருஷம் ஆகிவிட்டது!

விஜயப் புரு ஒருநாள் ஆகாரத்துக்காக நல்ல மத்தியான வேளையில் எங்கெல்லாமோ அலைந்துவிட்டு ஒரு மரக் கிளையில் "அப்பாடா!" என்று வந்து உட்கார்ந்தது. அப்போது எங்கிருந்தோ அழும் குரல் வந்தது! உடனே



# நட்சத்திர உலகம்



மேலே ஒரு நட்சத்திரம் தெரிகிறது. பாருங்கள்! அதை அடைய வேண்டும். அதற்கு வழி தெரியாமல் எதிர் வீட்டு விச்சு திண்டாடுகிறான். அதற்குப் போக உங்களால் வழி கண்டு பிடித்துச் சொல்ல முடிகிறதா, பாருங்கள்!

## இரண்டு விடுகதைகள்

ஈரேழு பதினாறு இறகு மயிலாட
முந்நான்கு பன்னிரண்டு முத்து மயிலாட
வாராத பெண்கள் எல்லாம் வந்து விளையாட

★

வராமலே இருந்து வந்தீர்கள்
வந்து ஒருதரம் போனீர்கள்
போய் மறுபடியும் வந்தீர்கள்
போகிறவர் எப்பொழுது வருவீரோ!

## ஒன்றில் இரண்டு

குழந்தைகளே! பென்சிலை எடுத்துக் கொண்டு காகிதத்தில் ஒரே ஒரு தடவை தான் நேர் கோடு கிழிக்க வேண்டும். ஆனால் நீங்கள் கிழித்த அந்தக் கோடு அதே போன்ற இரண்டு கோடுகளாகி விட வேண்டும். இது மந்திரம் இல்லை; மாயம் இல்லை. தந்திரம்தான். உங்களால் முடிகிறதா, பாருங்கள்!

விஜயப் புறா, சுற்று முற்றும் திரும்பிப் பார்த்தது. தூரத்தில் ஒரு அழகிய பஞ்சவர்ணக் கிளியிருந்தது. அதுதான் அழுது கொண்டிருந்தது. அதன் கண்களிலிருந்து முத்து முத்தாகக் கண்ணீர் பெருகிக் கொண்டிருந்தது. இதைப் பார்த்ததும் விஜயனுக்கு ரொம்ப வருத்தமாகப் போய்விட்டது! அதன் மேல் இரக்கம் ஏற்பட்டது. "அதற்கு என்ன கஷ்டமோ, பாவம்!" என்று நினைத்து, பறந்து போய் அதன் பக்கத்துக் கிளையில் சற்றுத் தூரத்தில் உட்கார்ந்து கொண்டது. "கிளியே கிளியே! நீ ஏன் அழுகிறாய்? எனக்குச் சொல்ல மாட்டாயா?" என்றது.

"எனக்கு நேர்ந்த கஷ்டத்தை எத்தனையோ பேருக்கு இது வரை சொல்லியாகி விட்டது! அந்தச் சோகக் கதையை நீயும் கேட்கத் தயார் என்றால் சொல்லுகிறேன்:

"பாண்டிய தேசத்து மகாராஜாவுக்குச் சுகுமாரி என்றொரு பெண் இருந்தாள். அவள் ரொம்ப அழகி என்று புகழ் பெற்றிருந்தாள். ஒரு நாள் பாண்டியன் ராஜ சபைக்கு மந்திரவாதி மாய்மாலன் வந்திருந்தான். பல வித்தைகள் செய்து காட்டினான். அப்போது ராஜகுமாரி பாண்டிய ராஜனுக்குப் பக்கத்தில் வீற்றிருந்தாள். அந்த அழகியைக் கண்ட மாய்மாலன் அவள் மீது மையல் கொண்டான். இது ராஜகுமாரிக்குத் தெரியாது. மந்திர வித்தையெல்லாம் முடிந்த பின், அன்று மாலை ராஜகுமாரி நந்தவனத்தில் உலாவிக் கொண்டிருந்தாள். அப்போது மந்திரவாதி வந்து, தன்னை மணந்து கொள்ளும்படி ராஜகுமாரியைக் கேட்டான். ராஜகுமாரி, தான் ஏற்கெனவே, அதிரூப சௌந்தர்யமுள்ள ஒரு ராஜகுமாரனைக் கல்யாணம் செய்து கொள்வதாக மனத்தில் தீர்மானித்து விட்டதாகவும், தான்

அவனைக் கல்யாணம் செய்துகொள்ள முடியாது என்றும் கண்டிப்பாகக் கூறி அனுப்பி விட்டாள். மேலும் அவனுடைய இந்தச் செயல் மிகவும் அடாத செயல் என்றும் வாயில் வந்த படி திட்டி யனுப்பி விட்டாள்.

"இதைக் கேட்ட மாய்மாலனின் உள்ளத்தில் அளவு கடந்த கோபம் பொங்கிற்று. அந்தக் கோபத்தை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் அவ்விடத்தை விட்டுப் போய் விட்டான். மாய்மாலன் போய் விட்டானா?......இல்லை, நிஜமாகப் போக வில்லை...சற்று நேரம் கழித்து ஒரு பழம் விற்கும் கிழவி உருவத்தில் வந்தான். ஆனால் ராஜகுமாரி சுகுமாரிக்கு, அந்தப் பழம் விற்கும் கிழவி தான் மாய்மாலன் என்பது தெரியாது. கிழவி, "அம்மா ராஜகுமாரி, உனக்குப் பழம் வேண்டுமா? மாம் பழம் வேண்டுமா? பலாப் பழம் வேண்டுமா? வாழைப்பழம் வேண்டுமா? அல்லது தேவ லோகத்துத் தீங்கனி வேண்டுமா?" என்றாள்.

ராஜகுமாரி கிழவியின் பேச்சுச் சாமர்த்தியத்தில் மயங்கிப் போய், "கிழவி! மாம்பழமும் வேண்டாம், பலாப்பழமும் வேண்டாம். அல்லது தேவலோகத்துத் தீங்கனியும் வேண்டாம். எனக்கு ஒரு கொய்யாப்பழம் கொடு, போதும்" என்றாள்.

"கிழவி உடனே ஒரு கொய்யாப் பழத்தைக் கொடுத்தான். கொய்யாப் பழத்தைத் தின்ற ராஜகுமாரி, அந்தக்கணமே கிளியாகி விட்டாள். அந்தக் கிளிதான் நான். நான்தான் ராஜகுமாரி சுகுமாரி" என்று கிளி சொல்லி அழுதது.

விஜயப் புருவுக்கு இந்தச் சோகக் கதையைக் கேட்டதும் மனது இளகி விட்டது. ராஜகுமாரி கிளியின் மீது அளவு கடந்த அனுதாபம் ஏற்பட்டது. மந்திரவாதி மாய்மாலன் மீது ஆத்திரம் பொங்கி வந்தது.

எனினும், கிளி குமாரியைப் பார்த்து, "பாவமே! மறுபடியும் உன் சுய உருவத்தை அடைய வழியேயில்லையா? மந்திரவாதி மாய்மாலனை, 'மறுபடியும் நான் என் சொந்த உருவத்தை எப்போது அடைவேன்' என்று நீ கேட்க வில்லையோ?" என்று கேட்டது.

"கேட்டேன்!" என்றது கிளி.

(தொடரும்)

# சோமு தைரியசாலி

சோமு பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்கு வரும்போதே, ரொம்பவும் பயத்துடன் பதுங்கிப் பதுங்கி வந்தான். அவன் அவ்வளவு அமைதியாக வந்ததை அவன் தாயார் கவனித்து விட்டாள் சரி, இன்றைக்கும் ஏதோ விசேஷம் இருக்கிறது என்று எண்ணிச் சோமுவிடம் சென்றாள்.

சோமுவைப் பார்த்த தாயார் அப்படியே பிரமித்து நின்று விட்டாள். ஏனெனில் அவன் முகமெல்லாம் அடிபட்டு வீங்கி யிருந்தது; கன்னம் சிவந்து இருந்தது. உடனே தாயார், இன்றும் சோமு ஏதோ வலுச் சண்டைக்குப் போய் நல்ல உதை பட்டுத் திரும்பி யிருக்கிறான் என்று தீர்மானித்து, "என்ன, இன்றைக்கும் யாருடனாவது வலுச் சண்டைக்குப்போய் உதைவாங்கிக்கொண்டு வந்தாயோ?" என்று கேட்டாள்.



சோமு பயந்த வண்ணம் சொன்னான்: "நான் ஒன்றும் வலுச் சண்டைக்குப் போகவில்லை, அம்மா. பள்ளிக்கூடத்தில் ஒரு பெரிய முரட்டுப் பையன், ஒரு சின்னப் பையனை அடிக்க வந்தான். அதைத் தடுக்கப் போனேன்......"

இதைக் கேட்ட அம்மாவுக்குச் சற்று சந்தோஷமாக இருந்தது. தன் பிள்ளை இவ்வளவு தைரிய சாலியாக இருக்கிறானே என்று தன் மனசுக்குள் மகிழ்ந்தாள் அந்த மகிழ்ச்சியை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல், "யாரப்பா அந்தச் சின்னப்பையன்?" என்று அன்புடன் கேட்டாள்.

"நான்தான் அம்மா!" என்றான் விஷமக்காரச் சோமு. — வெங்கு.

# வட்ட மேஜை

## சர்க்கார் பஸ்

சென்ற வெள்ளிக்கிழமை மாலை தண்டையார்ப்பேட்டை பஸ் ஸ்டாப்பிங்கில் திருவொற்றியூர் போகிற கவர்மெண்ட் பஸ்ஸில் ஏறினேன், சுவாமி தரிசனத்துக்காக. பஸ்ஸில் நல்ல கூட்டமிருந்தது. திருவொற்றியூர் போக டிக்கட்டுக்காக இரண்டு அணாவைப் பெற்றுக் கொண்டு அடுத்தவரிடம் டிக்கட்டுக்குப் பணம் வாங்க ஆரம்பித்தார் கண்டக்டர். உடனே நான் எனக்கு டிக்கெட் கொடுக்கவில்லையே என்றுகேட்டேன். தருகிறேன் என்று சொல்லிவிட்டு வேலையில் ஈடுபட்டிருந்தார். மீண்டும் மீண்டும் மூன்று முறை டிக்கட் கொடுங்கள் என்று கேட்டேன். கண்டக்டர் டிக்கட் கொடுக்காமல் காலம் கடத்தினார். பஸ் நிற்குமிடம் நெருங்கியது. டிக்கட் வாங்காமலிருப்பது குற்றமென எண்ணிக் கடைசியாகச் சற்று உரத்துக் கேட்டேன். பின்பு ஒரு கசங்கிய (உபயோகித்த) டிக்கெட்டைக் கொடுத்தார். இதை உணர்ந்து "எனக்குப் புது டிக்கெட் கொடு. இது வேண்டாம்" என்று கண்டிப்பாய்க் கேட்டேன். உடனே புது டிக்கெட் கொடுத்து விட்டார். கடைசியாக நான் உரத்த குரலில் கேட்டதினால் பஸ்ஸிலுள்ளவர்களில் சிலருக்கும் விஷயம் தெரிந்து விட்டது. பிரயாணிகளில் ஒருவர் என்னைப் பார்த்து, "என்னய்யா பெரிய திருட்டைக் கண்டு விட்டீர்! பொல்லாத யோக்கியன் மாதிரி கூச்சல் போடுகிறாயே! ஊரில் பேல் கணக்கிலும் மூட்டையாகவும் கோட்டுகளாகவும் இன்னும் எவ்வளவோ பெரிய திருட்டெல்லாம் நடக்கிறது! அதை எல்லாம் தடுப்பதுதானே, பாவம் ஏழை என்னமோ இரண்டணா எடுத்தால் இதைப் பிரமாதமாய்ப் பேசுகிறாயே" என்றும் இன்னும் சில கெட்ட வார்த்தைகளாலும் திட்டினார். "ஏதோ என்வரை இவ்வித காரியங்களுக்கு இடம் கொடுப்பதில்லை. நான்கேட்டேன். கண்டெக்டர் கொடுத்து விட்டார். காரியம் முடிந்தது. நீர் ஏன் என்னைத் திட்டுகிறீர்!" என்று கூறிச் சமாதானம் செய்தேன். உடனே மற்றுமுள்ள சிலரும் என்னைக் கடிந்தார்கள். "உலகத்தில் யார்தான் உண்மையாயிருக்க முடியும்! நீதான் குற்றமே செய்யாத சத்தியவானோ! அவனுக்குக் கிடைக்கும் சம்பளம் போதுமா! நீதான் சொல்லு!" என்று பலவாறாகக் கண்டக்டருக்குப் பரிந்து பேசினார்கள். நான் அத்தனை பேர் மத்தியிலும் சிக்கித் திணறி விட்டேன். ஒருவர் "ஓ! கதர் போட்டிருக்கான் ஐயா, கதர்! அதுதான் இப்படிப் பேசுகிறான்" என்று சில கொச்சை மொழிகளில் வசைமாரி பொழிந்தார். "கதர்தான் போட்டிருக்கிறேன், அதனால்தான் இப்படி நடந்து கொள்கிறேன்" என்று பதில் சொன்னேன். அப்பொழுது ஒரு அம்மாள் "எனக்குக் கூடத்தான் டிக்கட் கொடுக்கவில்லை" என்றார்கள். இதுபோன்ற அநீதி தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கிறது. இதனால் நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதுடன் கண்டெக்டர்களையும் கெடுத்து நமது சொந்த சர்க்கார் பஸ்ஸுக்கும் நஷ்டம் ஏற்படுத்திவிடுகிறோம். இதுபோன்ற அநியாயங்கள் நடவாமலிருக்கப் பொது ஜனங்கள் முயல வேண்டும்.

வண்ணையம்பதி
5—2—51 சு. வீரப்பன்

○●○

## இந்தியரின் அவதி

எனது நண்பர் ஒருவர் அப்புத்தளை என்னும் நாட்டுப்புறத்தில் இருக்கிறார். அவர் 1946 ஜனவரி மாதம் இலங்கைக்கு வந்தவர். அதிலிருந்து இன்றுவரை இலங்கையில் ஒரே கடையில்தான் இருந்து வந்திருக்கிறார். சென்ற வாரம் அவர் தகப்பனாருக்கு உடம்பு அசௌகரியமாக இருப்பதாகத் தந்தி வந்தது. அந்தத் தந்தியைப் பார்த்தவுடன் மனம் பதறித் தம் முதலாளியிடம் லீவு பெற்றுக் கொண்டு கொழும்பு டவுனிலிருக்கும் ஹை கமிஷனர் காரியாலயத்திற்குப் பாஸ் போர்ட் வாங்கி விஸா எடுப்பதற்காக, அவருக்குள்ள அத்தாட்சிகளையும் தமக்கு வந்த தந்தியையும் கொண்டுபோய் விஸா வாங்குவதற்கு 52-வது ஆளாகப் போலிங்கில் நின்றார். பக்கத்தில் நின்ற ஒருவர், "ஏனய்யா தந்தியை வைத்துக் கொண்டு போலிங்கில் நிற்கிறீர்! நேரே போய்த் தந்தியைக் காண்பியுங்கள். உங்களுக்கு உடனே விஸா கிடைக்கும்" என்று சொன்னார். அவர் பேச்சை நம்பித் தந்தியை எடுத்துக் கொண்டு முன்னால் போய் நின்றார். அங்கே காவலாக நிற்கும் பியூன், "அடே! என்னடா இது! தந்தியாவது, கிந்தியாவது, போய்ப் போலிங்கில் நில்" என்று பிடித்துத் தள்ளி விட்டான். ஒருவரும் ஏனென்று கேட்பாரில்லை. இப்படி அவதிப்படும் நேரத்தில் ஒருவன் வந்து "ஓய்! ஐந்து ரூபாய் கொடும், உன்னை முன்னால் கொண்டுபோய் நிறுத்துகிறேன்" என்றான். தந்தையைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலில் ஐந்து ரூபாயைக் கொண்டுபோய் நீட்டினார். உடனே ரூபாயை வாங்கிக்கொண்டு 10-வது ஆளாக நிறுத்தினான். உள்ளே போய் விஸா கொடுப்பவரிடம் அவர் கொண்டுவந்த அத்தாட்சியையும், தந்தியையும் காண்பித்தார். தந்தியை வாங்கிப் பார்த்தவுடன், "இது, என்ன ஓய், பொய்த் தந்தியாக இருக்கிறது" என்று சொல்லி வெளியேற்றிவிட்டார்.

நண்பரின் பாடு அந்தக் கடவுளுக்குத்தான் தெரியவேணும். ஒரு இந்தியனை இப்படிக் கொடுமைப் படுத்துவது நியாயமா! கூடிய வரை முயற்சி யெடுத்தும் விஸா வாங்க முடிய வில்லை. மறு நாள் ஒரு தந்தி "தகப்பனார் இறந்து விட்டார். உடனே புறப்படு" என்று வந்தது. என்னே, கொடுமை! அந்தத் தந்தியைக் காண்பித்தார். அதற்கும் அந்த விஸா ஆபீஸர் இதில் எனக்கு நம்பிக்கை இல்லை. நீ கொண்டு வந்திருக்கும் அத்தாட்சிகளும் போதாது" என்று சொல்லிவிட்டார்.

பிறகு நூறு ரூபாய் செலவழித்து விஸா எடுத்தார். இலங்கைக்கு இனிமேல் திரும்பாதே என்று நாலு சீல் போட்டு விஸாவைத் தபாலில் அனுப்பிவிட்டார்கள். கடைசியில் கடன் பட்டும் பட்டினி, கலியாணம் பண்ணியும் சந்நியாசி என்ற பழமொழிப்படியாகி விட்டது. இந்தமாதிரி அவதியிலிருந்து இந்தியர்களுக்கு விமோசனம் கிடைக்குமா!

கொழும்பு
9—2—51

பி. அழகு

○●○

## சோழ நாட்டில் உல்லாச யாத்திரை

"பொன்னியின் செல்வன்" என்னும் எழுத்தோவியத்தின் மூலம் சோழ வளநாட்டின் இன்பக் காட்சிகளை மனக் கண்ணால் கண்டு களித்து வரும் ஹிந்து தியாலாஜிகல் உயர்நிலைப்பள்ளியின் மாணவர்கட்கு அவற்றை நேரில் கண்டானந்திக்கும் வாய்ப்புச் சமீபத்தில் கிடைத்தது.

சென்ற 22—1—51 திங்கட் கிழமை காலை ஒன்பது மணிக்கு மேற்படி பள்ளியின் மாணவர் சங்கம், ஆசிரியர் சங்கம், பஜனைச் சங்கம் இவற்றின் சார்பில் முந்நூற்று முப்பத்தொன்பது மாணவர்களும் ஆசிரியர்களும் கொண்ட ஒரு யாத்திரை கோஷ்டி கும்பகோணம், தஞ்சாவூர் முதலிய ஸ்தலங்களைத் தரிசிக்கப்புறப்பட்டது.

இக் குழுவினர் கும்பகோணம், சுவாமிமலை, தஞ்சாவூர், மாரியம்மன் கோயில், திருவையாறு முதலிய திவ்யக்ஷேத்திரங்களைத் தரிசித்தனர். முன்னேற்பாட்டுடன் பிரயாணத் திட்டம் வகுக்கப்பட்டமையாலும், விருந்தினரை உபசரிக்கும் பெருங் குணம் படைத்த சோழ நாட்டில் உணவு வசதிகள் குறைவின்றிச் செய்யப்பட்டமையாலும், மாணவர்கள் வெகுவாக இப் பயணத்தை ரசித்தனர்.

கும்பகோணத்திலும், தஞ்சையிலும் நகரமாந்தர்களால் கோஷ்டியினருக்கு அமோகமான வரவேற்பு அளிக்கப்பட்டது. தஞ்சையில் நகராண்மைக் கழகத் தலைவர் திரு அய்யாசாமி வாண்டையார் அவர்களாலும், குஜராத்தி சங்கத்தினராலும் வாசித்தளிக்கப்பட்ட வரவேற்புப் பத்திரங்கள் பள்ளியின் தொண்டைப் பெரிதும் பாராட்டின.

கும்பகோணத்தில் பல கோயில்களின் தரிசனமும், சுவாமி மலையில் பொன்னி நீராடலும், ஸ்ரீசுவாமிநாத சுவாமியின் தரிசனமும் சிறப்பாக நடை பெற்றன. தஞ்சைப் பெரிய கோயிலில் கலைச் செல்வங்களையும், சித்திரப் பொக்கிஷங்களையும் கண்ட மாணவர்கள் சோழ மன்னர்களின் பெருமைகளைக் கண்டு பிரமித்தனர். தஞ்சாவூர் அரண்மனையின் அழகையும், சங்கீத மஹாலின் சிறப்பையும், சரஸ்வதி மஹாலின் அறிவுச் செல்வத்தையும் மாணவர்கள் என்றென்றும் மறக்க முடியாது. சதாசிவப் பிரம்மேந்திரர் அவர்களால் பூஜிக்கப்பட்ட மாரியம்மனைக் கண்ட மாணவர்களின் மெய் சிலிர்த்தது. திருவையாற்றில் தியாகப் பிரம்மத்தின் சமாதியைக் கண்ட மாணவர்கள் பக்தி பரவசர்களாக மனமுருகிக் கண்ணீர் மல்கினர்.

இவ்விதம் பல சரித்திரப் பிரசித்தி பெற்ற ஸ்தலங்களையும், கலைப் பொக்கிஷங்களையும், தெய்வ ஸான்னித்தியம் வாய்ந்த திவ்விய ஸ்தலங்களையும் திட்டப்படி தரிசித்த மாணவர்கள் குடியரசு நாளன்று கொடி வணக்கம் செய்துவிட்டுத் தஞ்சையை விட்டுப் புறப்பட்டுச் சுகமாகச் சென்னைக்கு வந்துசேர்ந்தனர்.

இந்த யாத்திரையினால் மாணவர்களும் ஆசிரியர்களும் ஒன்றாக உண்டு, உடுத்து உறங்கியமையால், அவர்களிடையே இருந்த பரஸ்பர அன்பும் நல்லுறவும் அதிகப்பட்டன. பல சரித்திர — பூகோள விஷயங்களை நேரில் கண்ட பிள்ளைகளின் உள்ளங்களில் அவை பசுமரத்தாணி போல் பதிந்தன. நம் நாட்டுப் பெருமைகளைக் கண்ட பிள்ளைகளின் மனத்தில் தேசபக்தி மேலோங்கியது. பல க்ஷேத்திரங்களைத் தரிசித்ததால் அவர்களின் பகவத் பக்தியும் வளர்ந்தது.

சென்னை
8—2—51

ஜெ. கே. பத்மநாபன்

○●○

## போலீஸும் பொதுஜனமும்

நான் ஒரு திருட்டுக் கேஸ் கண்டு பிடித்துப் போலீஸில் ஒப்புவித்தேன். அதற்காகத் தஞ்சை சப் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் 6-2-51-ல் சாட்சி சொல்லப் போயிருந்தேன். கேஸ் முடிந்ததும் வழக்கம்போல் படிச் செலவுக்காக எழுதிக் கொடுக்கும் மனுவை எழுதிக் கொடுத்தேன். அதற்கு அவர்கள் கையில் பணம் இல்லை என்றும் விலாசம் கொடுத்து விட்டுப் போங்கள், ரூபாய் அனுப்பிவைக்கிறோம் என்றும் சொன்னார்கள். ஆனால் நாளது தேதி வரையில் ரூபாய் வந்த பாடில்லை.

அன்று எனக்கு என் தொழிலைக் கவனிக்க முடியவில்லை. அத்துடன் என் சொந்த ரூபாய் வேறு செலவு செய்து கொண்டு போனேன். இப்படி இருக்க ரிவின்யூ இன்ஸ்பெக்டர் முதல் மந்திரிகள் வரை எல்லாரும் "பொதுமக்கள் போலீஸாருடன் ஒத்துழைக்க முன்வர வேண்டும்" என்றும் அறிக்கை விடுகிறார்கள்.

ஆனால் செயலில் மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ஒருவர் போலீஸுக்குக் கேஸ் கண்டு பிடித்துக் கொடுத்தால் அவர்களுக்குத் தொந்தரவுதான் அதிக மிருக்கிறது. செலவு செய்த பணம் அவ்வளவும் கிடைக்காவிட்டாலும் அவர்கள் கொடுக்கும் படிச் செலவு கூட உடனே வந்து சேருவதில்லை. இவைகளைச் சீர்திருத்தாமல் தினம் பிரசங்கத்தில் மட்டும் ஒத்துழைக்க வேண்டும் என்று கேட்பதில் என்ன பிரயோஜனம்!

அம்மாபேட்டை
10—2—51

ஜி. என். சாமி

# ஜடைவில்லை

## புஷ்யன்

சாயந்திரம் பத்மாவின் வீட்டுக்குப் போய் மஞ்சள், குங்குமம் வாங்கிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பிய சீதா, கையிலிருந்த வெற்றிலைப் பாக்கை வைத்து விட்டு ஜடையின் மேல் கை வைத்தவள் நாகம் தீண்டப்பட்டவள்போல் "ஐயோ அம்மா!" என்று கூச்சலிட்டாள்.

"என்னடி? என்ன?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள் அவளுடைய தாயார் ஒன்றும் புரியாமல்.

"ஜடை வில்லை...!"

"அதற்கு என்ன வந்துவிட்டது இப்போ!"

"தலையில் காணுமே ... எங்கேயோ விழுந்து விட்டாப்போலே இருக்கே......"

"என்ன? விழுந்து விட்டதா? என்னடி பண்றே நீ! தலைக்குக் கல்லைக் கொண்டு வந்து விட்டாயே...!" என்று பீதியுடன் கூக்குரலிட்டாள் அவளுடைய தாயார்.

வீடு முழுதும் தேடினாள் சீதா. ஓட்டமாய் ஓடிப் பத்மா வீட்டுக்குப் போய் அவர்களுடைய வீட்டில் தவறி விழுந்து விட்டதா என்று கேட்டுப் பார்த்தார்கள். பத்மா பயந்து போய், "இங்கே ஒன்றும் காணுமே, நீ போகிறபோது கூட உன் தலையில் இருந்ததே!" என்றாள்.

சீதாவுக்கு ஞாபகம் வந்தது. பத்மாவின் வீட்டிலிருந்து வரும்போது ஞாபகமாகப் பின்னலைத் தொட்டுப் பார்த்துக் கொண்டாள். ஜடைவில்லை இருந்தது. வழியில் வரும்போதுதான் எங்கோ விழுந்திருக்க வேண்டும்.

ஆமாம். இப்போது ஞாபகம் வந்தது. அந்த மாட்டு மந்தை ஒன்று மிகவும் பக்கத்தில் வந்து விட்டது. சீதா அதைக் கண்டு திடுக்கிட்டு ஓடி ஒதுங்கினாள். அப்போது தான் அது விழுந்திருக்க வேண்டும்.

கும்பகோணத்து வீதியிலே எத்தனை ஜனங்கள் போகிறார்கள், வருகிறார்கள், எந்தப் புண்ணியவான் ஜடைவில்லைக்குக் கொடுத்து வைத்திருந்தானோ...?

சீதாவுக்கு உடம்பு அப்படியே பயத்தால் நடுங்கிற்று. அந்த ஜடைவில்லை அவளுடைய மாமியார் வீட்டில் அவளுக்குப் பண்ணிப் போட்டது. மாமியார் வீட்டில் செய்த நகை தொலைந்து விட்டது என்றால் ஒரு மாட்டுப் பெண்ணின் உள்ளம் எப்படி இருக்கும் என்பதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?

அவளுடைய பெற்றோர் சாதாரணமான ஸ்திதியில் உள்ளவர்கள்தான். அவள் ஏதோ அருமையான பெண்தான் என்றாலும், அவளுடைய கல்யாணத்திற்குப் பட்ட கடனே அவர்களை நெருக்கிக்கொண்டிருந்தது. அப்படியிருக்கும்போது தொலைந்து போன இந்த நகையை ஈடு செய்ய எப்படி அவரால் உடனே சாத்தியமாகும்? அப்படிக் கஷ்டப்பட்டுக் கடனோ, உடனே வாங்கி வேறு ஜடைவில்லை செய்து கொடுத்தனுப்பிவிடலாம் என்பதற்கும் நேரமில்லாதபடி அவளுடைய கணவன் அவளை அழைத்துப் போக நாளைக் காலை வண்டியில் வரப்போகிறான். சீதாவின் மனம் இந்த விஷயத்தை எப்படித் தன் கணவனிடமோ, மாமியாரிடமோ தெரிவிப்பது என்று திகிலடைந்து கொண்டிருந்தது. ரயில் வண்டி வேகமாக ஓட ஓட அவளுடைய மனம் மேலும், மேலும் சஞ்சலமடைந்து வந்தது. மாமியார் வீடு வந்துவிட்டதே, விஷயம் வெளிப்பட்டு விடுமே என்ன செய்வது என்று கவலையாகிவிட்டது. வண்டி சென்னை வந்தடைந்ததும் அவள் கடைசியாகத் தீர்மானம் செய்து கொண்டாள், தற்போது இதை யாரிடமும் சொல்லாமலிருப்பது என்று. அதற்குள் பிறந்த வீட்டுக்குக் கடிதம் எழுதி வேறொன்று செய்ய ஏற்பாடு செய்துவிடலாம். அடுத்த தடவை ஊருக்குப் போய்விட்டுத் திரும்பும் போது புதிய ஜடைவில்லையைக் கொண்டு வந்து விட்டால் அப்புறம் விஷயத்தைச் சொல்லிவிடலாம். அவர்களும் ஒரு மாதிரி சமாதானமடைந்து விடுவார்கள்' என்று சீதா எண்ணினாள்.

## 2

சீதாவின் நாத்தனார் கமலாவுக்கு வயது பதினைந்து ஆகிறது. அவளுக்குக் கலியாணத்திற்கு வரன் தேடிக் கொண்டிருந்தார்கள். கமலாவுக்குச் சீதாவினிடம் மிகவும் பிரியம். இருவருக்குள்ளும் எவ்வித ஒளிவு மறைவும் கிடையாது. வெகு அந்நியோன்னியமாய்ப் பழகினார்கள். கமலா சீதாவை எப்போதும் 'மன்னி மன்னி' என்று சுற்றிக் கொண்டிருப்பாள். எப்போதாவது சீதாவை அவளுடைய மாமியார் ஏதாவது குறை கூறினால் உடனே கமலா வரிந்து கட்டிக்கொண்டு சீதாவுக்குப் பீஸ் இல்லாத வக்கீலாக மாறிவிடுவாள். இருவருக்குள்ளும் எவ்வித அந்தரங்கமும் இல்லாதபோது உடைமைகளில் மட்டும் என்ன ரகசியம் இருக்கும்? சீதா பிறந்தகத்திலிருந்து வரும்போதெல்லாம் தனக்கு அவர்கள் வாங்கிக் கொடுத்த புடவை, ரவிக்கைத் துணிகள் இத்யாதிகளைத் கமலாவுக்குப் பிரத்தியேகமாகக் காட்டு

வான். கமலாவுக்குக் கொண்டு வந்திருக்கும் 'பரிசை' அவளிடம் தருவாள். சில சமயம் அவள் காட்டுவதற்கு முன்னதாகவே காமரா உள் கதவை மூடிக் கொண்டு சீதாவைப் பெட்டியைத் திறக்கச் செய்து சோதனை போடுவாள். அவ்வளவு மனமொத்துப் பழகி வந்தார்கள்.

இந்தத் தடவையும் அப்படித்தான்; இருவரும் காமரா உள்ளைத் தாளிட்டுக் கொண்டு பெட்டியைக் குடைந்து கொண்டிருந்தார்கள். கமலாவுக்குத் தான் கொண்டுவந்திருந்த ஸ்னோ, பவுடர் எல்லாவற்றையும் எடுத்துக் கொடுத்தாள் சீதா. மிகவும் மகிழ்ச்சியுடன் பெற்றுக் கொண்டாள் கமலா. மேலும் கமலா தன் மன்னியின் பெட்டியைக் குடைந்து கொண்டிருந்தாள். அவளுடைய கையில் ஜடைவில்லை வைக்கும் பெட்டி அகப்பட்டது. அதைத் திறந்தாள். அது காலியாக இருந்தது.

"எங்கே மன்னி ஜடைவில்லை? தலையிலே வைத்துக் கொண்டிருக்கிறாயா என்ன?" என்று கேட்டாள்.

சீதாவுக்குத் திகிலாகிவிட்டது. விஷயம் அம்பலத்துக்கு வந்துவிட்டதே என்று பயமாய்விட்டது. என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் விழித்தாள். அந்தச் சமயத்தில் அவளுக்குக் கமலாவின் மேல் கோபம் உண்டாயிற்று.

ஆனால் அதை வெளியில் காட்ட முடியுமா? ஆபத்தல்லவா உண்டாகும்? இப்போது அவள் செய்யவேண்டியது என்ன? கமலாவுக்குத் தொண்டை பெரியது. ரகசியமும் நிற்காது. மேலும் குரல் எட்டு ஊர் கேட்கும். ஆகவே அவளை நோக்கித் தன் வாயின்மேல் விரலை வைத்துப் பேசாமலிருக்கும்படி சமிக்ஞை செய்தாள். 'பிறகு சொல்கிறேன்' என்று சீதா பாவனை காட்டியதும் கமலாவும் 'டக்' கென்று அதை விட்டு விட்டாள். அவளுடைய மனத்தில் மட்டும் உடனே ஏதோ விஷயம் முக்கியமானதாயிருக்கிறது என்று தெரிந்து விட்டது. உயிருக்கு உயிரான மன்னி சீதாவுக்கு அதனால் ஏதேனும் சங்கடம் உண்டாகுமோ என்று அவள் மனம் எண்ணிற்று.

சீதாவும் கமலாவும் சாயந்திரம் ஜலம் எடுத்துவர ஆற்றங் கரைக்குச் சென்ற போது மெதுவாகக் கமலா ஜடைவில்லை விஷயத்தைப் பற்றிக் கேட்டாள்.

ஜடைவில்லை நினைவு வந்ததும் மறுபடியும் சீதாவுக்குத் 'துணுக்' கென்றது.

அவளிடம் சொல்லலாமா, சொன்னால் அவள் பத்திரமாய்க் காப்பாற்றுவாளா என்ற சந்தேகம் உண்டாயிற்று. கமலா அதை அவளுடைய மாமியாரிடம் கூறினால்—என்ன இருந்தாலும் நாத்தனார் தானே—அப்புறம் என்ன வாகும்? என்றெல்லாம் எண்ணினாள்.

"ஏன் மன்னி, முகம் ஒரு மாதிரியாயிருக்கிறது? நான் ஜடைவில்லையைப் பற்றிக் கேட்டு அனாவசியமாக உனக்கு வருத்தத்தைக் கொடுத்து விட்டேன்" என்று அன்புடன் கூறினாள்.

சீதா தன் கண்களைத் தாண்டி வரயத்தனித்துக் கொண்டிருந்த கண்ணீர்த் துளியைப் புடவைத் தலைப்பால் துடைத்து விட்டு, "கமலா, இதை அம்மாவிடம் சொல்வதில்லை யென்று வாக்களித்தால் சொல்கிறேன்" என்றாள்.

"என்ன மன்னி, நான் என்ன அப்படிக் கோள் சொல்கிறவளா என்ன? நீ எனக்கு உயிர் மாதிரி மன்னி. என் உயிர் போனாலும் அதைப்பற்றி ஒருவரிடமும் சொல்லமாட்டேன்" என்றாள் கமலா.

பிறகு சீதா, "ஒன்றுமில்லை கமலா, ஜடைவில்லை தொலைந்து விட்டது. அம்மாவுக்குத் தெரிந்தால் கோபித்துக் கொள்வாளே என்று பயமாயிருக்கிறது" என்று தட்டுத் தடுமாறிச் சொன்னாள்.

கமலா முன்னமே இப்படி ஏதாவது இருக்கும் என்று ஊகித்திருந்தாள். ஜடைவில்லை தொலைந்து போயிருக்கும், அல்லது அவளுடைய பிறந்தகத்தில் பண முடைக்காகக் கொடுத்து விட்டு வந்திருப்பாள் என்று நினைத்தாள். இருந்த போதிலும் சீதாவே வாயாரத் தொலைந்து விட்டது

## விவாகம்

பிரபல மருந்துகள் தயாரிப்பவர்களான ஆயுர்வேதாஸ்ரமத்தின் உரிமையாளர் டாக்டர் D. தேசிகாச்சார்லு அவர்களின் குமாரர் சிரஞ்சீவி D. கோபாலாச்சார்லுவுக்கும், பெங்களூர் M. A. T. அய்யங்கார் அவர்களின் குமாரத்தி சௌ. லீலாவுக்கும் 9—2—1951 அன்று தியாகராயநகர், கோபதிநாராயணசாமி ரோடு 79-ம் நம்பர் கிருகத்தில் விவாகம் சிறப்பாக நடந்தேறியது. தம்பதிகளுக்கு அநேக வெகுமதிகளும் ஏராளமான வாழ்த்துக்களும் வந்து குவிந்தன. அன்று மாலை வரவேற்பு விழா வைபவத்தின் சமயம் குமாரி வைஜயந்திமாலாவின் நடனக் கச்சேரி இனிது நடந்தது.

டாக்டர் தேசிகாச்சார்லு அவர்கள் தமது குமாரன் சிரஞ்சீவி D. ஸ்ரீநிவாசனுக்கு 8—2—51 அன்று உபநயனமும் செய்வித்தார்.

என்று கூறியதும் கமலாவுக்குத் 'திக்' கென்றது. ஒன்று, இரண்டா? இரு நூற்றைம்பது ரூபாய் போய் விட்டதென்றால்...... சட்டென்று மனம் சமாதானம் அடையுமா?

கமலாவுக்கு என்ன பதில் சொல்வதென்று புரியவில்லை. பிறகு சீதாவைப் பார்த்து, "அம்மாவுக்கு எப்பவாவது தெரிந்துதானே தீரணும்? தெரியாமல் எத்தனை நாள் இருக்கும்?......உம்...... இதுக்கு என்ன பண்ணுகிறது?" என்றாள்.

"இல்லை கமலா......அடுத்த பொங்கலுக்கு ஊருக்குப் போகிறபோது எங்கள் வீட்டிலே வேறு ஜடைவில்லை செய்து வைத்திருப்பார்கள். அதுவரைக்கும் தெரியாமல் இருந்தால் போதும்" என்றாள்.

"அப்படியென்றால் பரவாயில்லை. நான் ஒண்ணும் யாரிடமும் சொல்லிவிட மாட்டேன், பயந்துவிடாதே...உனக்குக் கஷ்டம் உண்டாகும்படி செய்வேனா?" என்றாள் கமலா. அத்துடன் அது முடிந்து விட்டது. அப்புறம் ஜடைவில்லையைப் பற்றிய பேச்சே வெளி வரவில்லை.

ஆனால் கமலாவின் உள்ளத்தில் மட்டும் ஜடைவில்லை விஷயம் சதா அரித்துக் கொண்டிருந்தது.

திடீரென்று ஒரு நாள் ஒரு யோசனை உதித்தது. அப்படிச் செய்தால் என்ன என்று தோன்றிற்று. அதை நினைக்க நினைக்க அவளுக்கு மிகவும் மகிழ்ச்சியுண்டாகிவிட்டது. இதனால்தான் எப்படிப்பட்ட கோபத்துக்கு ஆளானாலும் பரவாயில்லை. தன் அருமை மன்னி தன் அம்மாவிடமிருந்து தப்பி வந்தால் போதும் என்று நினைத்து ஒரு காரியம் செய்ய உத்தேசித்தாள். அதை எப்படி நிறைவேற்றுவது என்று புரியவில்லை. அதற்குச் சந்தர்ப்பம் சீக்கிரம் வராதா என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். சந்தர்ப்பம் சீக்கிரம் வரவில்லையென்றால் பிறகு சீதா பிறந்தகம் போனால் அவளுடைய பெற்றோர்கள் எப்படியாவது கடனோ உடனோ பட்டு நகை செய்து அனுப்பி விடுவார்கள். அப்புறம் என்ன பிரயோஜனம்?

## 3

அன்று ஞாயிற்றுக்கிழமை. சாயந்திரம் மதுரை மகாதேவய்யரின் சங்கீதக் கச்சேரி நடந்தது. மதுரை மகாதேவய்யரைப் பற்றிச் சங்கீதமே தெரியாதவன் கூட நன்றாக அறிவான். அந்தப் பிரசித்தி பெற்ற சங்கீத வித்வானின் கச்சேரிக்குப் போகலாம் என்று புரோகிராம் போட்டிருந்தான் சீதாவின் கணவன் பலராமன்.

சாயந்திரம் கச்சேரிக்குப் புறப்பட ஆயத்தம் செய்து கொண்டார்கள் கமலாவும், சீதாவும். கமலா சீதாவிடம் உரக்க "மன்னி, நீ உன் ஜடைவில்லையை வைச்சுக்கவில்லையா?" என்று கேட்டாள்.

சீதாவின் முகம் 'சட்'டென்று பயத்தால் வெண்மையாக மாறியது. தன்னைக் காட்டிக் கொடுக்கிறாள் என்று அவளுக்குத் தோன்றியது. அதற்குள் கமலா அவள் கையில் ஒரு ஜடைவில்லையை வைத்தழுத்தினாள். கண்களால் ஜாடையும் காட்டினாள். சீதா ஏதோ மந்திரத்தால் கட்டுண்டவள் போல், "இதோ வைத்துக் கொள்கிறேனே, கமலா!" என்றாள் உயர்ந்த சுருதியில்.

கமலா இன்னொரு கையிலிருந்த மற்றொரு ஜடை வில்லையைத் தன் பின்னலில் செருகிக் கொண்டாள்.

கமலாவும், சீதாவும் பலராமனின் பின்னால் அன்ன நடையுடன் மயில் தோகைகள்போல் புடவைத் தலைப்பு அசைந்தாட சங்கீதக் கச்சேரிக்குப் போனார்கள்.

சங்கீதக் கச்சேரிக்குக் கமலாவின் சிநேகிதி சுசீலாவும் வந்திருந்தாள். கச்சேரி ஆரம்பமாகும்வரை சீதா, கமலா, சுசீலா மூவரும் என்னென்னவோ வம்பளந்து கொண்டிருந்தார்கள். மதுரை மகாதேவய்யர் 'ஜம்'மென்று 'ஜலஜாக்ஷிரோ' என்று ஹம்ஸத்வனிராக வர்ணத்தை ஆரம்பித்ததும் 'கப்' பென்று தங்கள் அரட்டைக் கச்சேரியை நிறுத்திவிட்டு அவருடைய கச்சேரியைக் கேட்க ஆரம்பித்தார்கள்.

கமலாவின் காதுகள் மட்டும் வெகு சிரத்தையுடன் பாட்டைக் கேட்டுக்கொண்டிருந்தன. ஆனால் அவளுடைய கண்கள் மட்டும் அப்படியும் இப்படியும் பார்த்துக் கொண்டிருந்தன. கைகளால் தன் பின்னலில் ஏதோ சேஷ்டை செய்து கொண்டிருந்தாள் வெகு ஜாக்கிரதையாக.

பாகவதரின் காம்போதி ஆலாபனையில் சீதா தன்னை மறந்து லயித்திருந்த தருணத்தில் சட்டென்று கமலா சுசீலாவின் கையில் ஏதோ ஒன்றை வைத்தழுத்தினாள். சுசீலாவும் அதைச் சட்டென்று மறைத்துக் கொண்டு விட்டாள். பிறகு கமலா நிம்மதியுடன் சங்கீதத்தை ரஸிக்கத் தொடங்கி விட்டாள்.

பாட்டுக் கச்சேரி ஐந்து நிமிஷத்துக்கொரு 'அப்ளாஸை'ப் பெற்று மூன்றரை மணி நேரம் நீண்ட பிறகு 'நீ நாமரூப மூலகு'வுடன் முடிவு பெற்றது.

பலராமனுக்குப் பின்னால் முன்மாதிரியே வீடு நோக்கிச் சென்றார்கள், சீதாவும் கமலாவும். கமலா சீதாவின் பின்னாலேயே ஜாக்கிரதையாக வந்தாள்.

வீட்டிற்குள் நுழைந்து இரண்டு நிமிஷமானதும் கமலா பின்னலைத் தடவினாள். மறு நிமிஷம் "அம்மா!" என்றலறினாள்.

"என்னம்மா......என்ன ஆயிடுத்து...... தேனா? ஏன் இப்படி அலறுகிறாய்?"

"அம்மா, அம்மா......" என்றாள் கமலா வெளிறிய முகத்துடன்.

"என்னடீது, கமலா! சொல்லேன்! டேய் பலராமா, விளக்கை எடுத்துப் பாரேன்" என்று ஒரேயடியாகக் கூக்குர விட்டாள் அவளுடைய தாயார்.

"அம்மா, ஜடைவில்லை!......"

"ஆ, ஜடைவில்லையா ......!"

"ஆமாம், அம்மா! காணுமே......" என்றாள் நடுங்கும் குரலில்.

கமலாவின் தாயாருக்கு ஒரு க்ஷணம் ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. சீதாவுக்கு வியப்பாகவும், புதிராகவும், பயமாகவும் இருந்தது. "கமலா..." என்று கூப்பிட்டு ஏதோ சொல்ல வாயெடுத்தாள்.

அதற்குள் அவளையே வெகு ஜாக்கிரதையுடன் பார்த்துக் கொண்டிருந்த கமலா சாமர்த்தியமாக, பேசாமலிருக்கும்படி ஜாடை காட்டினாள். மறுபடி இரண்டாவது தடவையாகச் சீதா மந்திரத்தால் கட்டுண்டவள் போல் மௌனமாக வாயை மூடிக்கொண்டு விட்டாள்.

அவளுடைய அம்மா கமலாவை லக்ஷார்ச்சனை செய்து கொண்டிருந்தாள். "ஒன்றுக்கும் பிரயோசனமில்லை. நூறு நூறாகப் போட்டு இரண்டு பேருக்கும் ஒரே மாதிரி ஆசையோடு மாட்டுப் பெண் வந்த சுபமான நாளுக்கு ஞாபகமாகப் பண்ணிப் போட்டால் தொலைத்து விட்டு வந்து நிற்கிறாயே! ஐயோ, கமலா! எப்படித்தான் நீ புக்ககம் போய் வாழப் போகிறாயோ......" என்று இன்னும் என்னென்னவோ அவள் பாட்டுக்குச் சொல்லிக் கொண்டே போனாள்.

## 4

சீதா கமலாவை அடுத்தநாள் ஆற்றுக்குப் போகும்போது கேட்டாள்: "என்ன கமலா, நீ இப்படிச் செய்யலாமா? என்னை ஒரு வார்த்தை கேட்காமல் செய்து விட்டாயே! நீ இப்படிச் செய்வாய் என்று தெரியவே தெரியாது. தெரிந்திருந்தால்......"

"தெரிந்திருந்தால் என்ன பண்ணுவாய், மன்னி! உனக்கு இன்னும் எங்கம்மா சுபாவம் தெரியவில்லை. நான் அவளுடைய பெண்ணானதனாலே ஜடைவில்லை தொலைஞ்சதுக்கு வெறுமனே திட்டினதுடன் நிற்கிறாள். நீ தொலைத்தாய் என்று மட்டும் தெரிந்திருந்தால் நிச்சயமாக உன் முதுகுத் தோலை உரித்துவிட்டிருப்பாள். முதலில் அது தொலைந்ததா என்றே சந்தேகம் உண்டாய்விடும். அதுவுமில்லாமே வேறொரு ஜடைவில்லை உங்க வீட்டிலே செய்யறதுன்னா லேசா? நீ ஜடைவில்லை தொலைந்து விட்டது என்று சொன்னதிலிருந்து எனக்கு மனசிலே ஒரே யோசனையாய்ப் போய் விட்டது. இதற்கு என்ன பண்ணுவது, உன்னை எப்படித் தப்புவிப்பது என்று தீவிரமாக யோசனை செய்து பார்த்தேன். நம் இருவருக்கும் ஒரே மாதிரிதான் ஜடைவில்லை செய்து போட்டார்கள். அதனால் என் ஜடை வில்லையை உனக்குக் கொடுத்து விட்டு என்னுடையது தொலைந்து விட்டதாகச் சொல்லி விட்டால் என்னைக் கோபிப்பார்கள். அவ்வளவுதான் செய்வார்கள். அதற்குமேல் என்ன செய்யப் போகிறார்கள் என்று தோன்றிற்று. அப்படியே செய்யவும் துணிந்து விட்டேன்."

"கமலா, ரொம்ப புத்திசாலியடி, நீ!"

"இதைக்கேள், மன்னி! அதற்காக 'நல்லநாளை' எதிர்பார்த்து வந்தேன். நேற்று அண்ணா பாட்டுக் கச்சேரிக்குப் போகலாம் என்று சொன்னதும் இதை விட நல்ல சந்தர்ப்பம் கிடைக்காது என்று எண்ணி, சுசீலாவிடம் போய் அவளுடைய ஜடைவில்லையை இரவல் கேட்டு வாங்கி வந்தேன். அம்மாவுக்கு நாம் இருவரும் ஜடைவில்லை வைத்துக் கொண்டு போகிறோம் என்று தெரிய வேண்டுமென்றுதான் அப்படி இரைந்து சொன்னேன். உனக்கு விஷயம் ஒன்றும் தெரியாததால் விழித்தாய்...ஆனால் பரவாயில்லை, மன்னி. எப்படியோ சமாளித்துக் கொண்டு விட்டாய். அப்படியில்லாமல் நீ தத்துபித்தென்று உளறிவிட்டிருந்தாயானால் ரொம்பவும் ஆபத்தாய்ப் போய்விட்டிருக்கும். எப்படியோ நான் நினைத்தபடி நடந்து விட்டது......உங்கள் ஊருக்கு எழுதிவிடு மன்னி, தொலைந்து போன ஜடைவில்லைக்குப் பதிலாக வேறு புதிதாகச் செய்ய வேண்டாம் என்று" என்றாள் கமலா.

"கமலா! நீ என்னைவிட சின்னவளாயிருந்தும் எவ்வளவு தாராள குணத்துடன் இப்படிச் செய்திருக்கிறாய்...உங்கம்மாவின் திட்டுகளை யெல்லாம் சகித்துக் கொண்டு இருக்கிறாய். அது சரி கமலா, நீ வைத்துக் கொண்டிருந்தாயே, கச்சேரிக்குப் போகும்போது ஒரு ஜடைவில்லை...... அதை எப்போது சுசீலாவிடம் கொடுத்தாய், நான் பார்க்கவே யில்லையே?" என்று கேட்டாள் சீதா.

"சரிதான். நீ பார்க்கும்படி கொடுத்திருந்தால் நாடகம் சோபித்திருக்குமா? நீ பாட்டுக் கேட்கும் சுவாரஸ்யத்தில் உன்னையே மறந்திருக்கும்போது நான் என் பின்னலிலிருந்து ஜடைவில்லையைக் கழற்றிக் கொடுத்தது உனக்கு எப்படித் தெரிந்திருக்கப் போகிறது?" என்றாள் கமலா.



# "ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை"

## 1 மண்டலம் (48 நாள்) கிரமப்படி பூஜை செய்யப்பட்டது
## ஆயுள் பூராவும் பலன் தரக்கூடிய
## வெள்ளி ரக்ஷை ரூ. 43-12-0

தற்போது அனுப்ப வேண்டியது ரூ. 5-12-0. ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை வேண்டியவர்கள் கோரும் கோரிக்கைகளை எழுதி தற்போது ரூ. 5-12-0 மணியார்டர் செய்யவும். கீழே கொடுத்துள்ளபடி நம்மிடம் ரக்ஷை வாங்கியபிறகு 108 நாளைக்குள் நன்மையான பலன்களை அனுபவித்து பாக்கி ரூ. 38-0-0 அனுப்பவும். தற்போது கேட்கும் ரூ. 5-12-0 ரக்ஷை வெள்ளி கவரிங்குக்கும் தபால் ரிஜிஸ்டர் செலவுக்கும், விளம்பர செலவிற்குமாக மேலே கண்ட தொகை கேட்கப்படுகிறது.

### ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை அணிவதால் ஏற்படும் நன்மைகள்

1. சுகசரீரிகளாயும், எப்போதும் போஜனாதிகளில் குறைவின்றியும் இருப்பார்கள்.
2. குடும்ப ஒற்றுமை. குடும்ப அபிவிருத்தி தனதான்யாதிகள் வாக்குப் பலிதம். குடும்ப நிர்வாக திருப்தி.
3. சகோதரம் ஒற்றுமை, சகோதரமில்லாதவர்களுக்கு சகோதரம் ஏற்படும். பிரிந்த சகோதரர் கூடுவர்.
4. மாதுர் அபிவிருத்தி, வாகன அபிவிருத்தி, பூமி கட்டட அபிவிருத்தி ஏற்படும்.
5. புத்திரர்களுக்கு ரோக நிவர்த்தி, மலடு உடையவர்களா யிருந்தாலும், புத்திரம் ஏற்படும்.
6. சத்துருக்கள் பங்க மடைவார்கள். தீராத ரோகமும் தீரும். ருணம் நிவர்த்தி.
7. வாலிபர்களுக்கு நல்ல குணவதி லபிப்பார்கள். மற்றவர்களுக்கு ஸ்திரீ நேசமும், ஸ்திரீயின் சிசுருஷையும் கிடைக்கும். பால்யப் பெண்கள் அணிவதால் சத் புருஷனை அடைவார்கள். மற்றவர் அணிவதால் கணவன் ஒற்றுமை. பிரிந்த கணவனை அடைவார்கள்.
8. ஸ்திரீகள் அணிவதால் மாங்கல்ய தீர்க்கமும் புருஷர் அணிவதால் ஆயுள் தீர்க்கமும்.
9. வாலிபர் அணிந்தால் பிதுருவின் பிரீதியை அடைவார். விசேஷ பாக்கியமும், லக்ஷ்மி கடாக்ஷமும் ஏற்படும்.
10. கல்வி பயிலுபவர்கள் அணிந்தால் கல்வியில் தேர்ச்சியும், படித்தவர்கள் அணிந்தால் உத்தியோகமும் கிடைக்கும். விவசாயிகளுக்கு கிருஷிகம் மேன்மைபடும். வியாபாரிகளுக்கு வியாபார அபிவிருத்தி ஏற்படும்.
11. அவரவர்கள் செய்யும் தொழிலில் நல்ல ஆதாயம் கிடைக்கும்.
12. நல்ல போக போக்கியமும் லாபத்தை உத்தேசித்து பண விரயமும் ஏற்படும்.

N. B :—அதர்மர்களும், நாஸ்திகர்களும் விசேஷ பலன்களை எதிர்பார்க்க முடியாது. 2. ரக்ஷை ஆர்டர் செய்பவர் ஆர்டர் கிடைத்த 9-ம் நாள்தான் ரக்ஷை பிரசாதத்துடன் அனுப்பப்படும். 3. வி. பி. பி.யில் அனுப்ப சாத்தியப்படாது. 4. வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்பு தொகைக்கு பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டர் வாங்கி அனுப்பவும்.

●

கோட்டமருதூர்

## ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஜோதிஷ ஆபீஸ்

அரகண்டநல்லூர் P. O. (S. A. Dt.)

Regd. No. M. 4392

இக் கைகள் எவ்வளவு சாமர்த்திய
மாக வேலை செய்கின்றன, ஆனால்...



...சாமர்த்தியமுள்ள கைகள் கூட
அழுக்கடைகின்றன !




அழுக்கடைந்த கைகள்
மறைந்திருக்கும்
அபாயத்தைத்
தாங்குகின்றன !

அழுக்கில் கண்களுக்குப்
புலப்படாத கிருமிகள் இருப்பதால்!

லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது !

L. 179-50 TM